உ

முருகக்கடவுள் துணை.

ஸ்ரீகயிலாசவர்க்கத்துள் மஹாமஹிமைபொருந்திய

நந்தீசுர மகாமுநிவர்

அருளிச்செய்த

# கருக்கிடை - நா.

இஃது,

மதுரை புக்ஷாப்

**இ. ரா. ம. குருசாமிக்கோன்**

அவர்கள் விருப்பத்தின்படி,

திருவெண்காடு.

**ஆறுமுக சுவாமிகளால்**

பார்வையிடப்பட்டு,

சென்னை

**A. தீனதயாள முதலியார்**

அவர்களால்,

சென்னை,

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ்ஸில்

பதிபிக்கப்பட்டது.

இதன் விலை] **1927** [அணா 12

## நந்தீசுரர் கருக்கிடை - நூல்.

ஏற்பானரிஷிமுனிவர் சித்தர்பாடல்
எல்லோரும்பாடியதோர் தமிழுக்கெல்லாம்
தாப்பானதிறவுகோல் இம்முந்நூறும்
சாற்றினேன்புவிதனிலே மனிதர்க்காகக்
கோப்பானகருக்குருவாம் வழியில்காணக்
கோர்வைகொண்டமணிபோலே வகையாய்த்தானே. 4

## நூல்.

வகையானசாஸ்திரங்கள் அநந்தம்உண்டு
வகைஅறியார்கருஅறியார் மடையர்மெத்த
துகையானசாஸ்திரத்தைப் பாடம்பண்ணிச்
சொல்லுவார்பொருள் அறியமாட்டார்ஐயோ
வகையானமாய்கைதனில் வீழ்ந்தழிந்து
மதிமயங்கிநிலைதவறி மதமேபூண்டு
தகையானகதைபால முடிவதல்லால் 5
சாஸ்திரத்தின்மறப்பறியார் கூறினேனே.

கூறினேன்சாஸ்திரத்தில் மறைத்ததெல்லாம்
கூறினதால்வெகுகோடி தபசிருந்து
மீறினார்அவருடைய பதம்இரண்டும்
மிகவணக்கம்செய்துகொண்டு நூலைவாங்கித்
தேறினார்தவமுனிவர் மகிமைபெற்றுச்
சித்தில்இருந்தார்பெரியோர் சிவமேஎன்று
ஆறினார்என்னுடைய நூலைப்பார்த்து 6
ஆதிசிவன்நந்திவாஎன் றழைத்திட்டாரே.

## சிவனுக்கும் நந்தீசுரருக்கும் தர்க்கம்.

அழைத்துமேஅருகிருத்தி அமிர்தம்ஊட்டி
அன்புடனேகருக்குருவை வெளியாய்ச்சொல்லத்
தழைத்துமேவாய்க்கொழுப்போ என்றுகேட்டார்
சமரசமாய்கரத்தால் பொத்திக்கொண்டு
இளைத்துமேகருக்குருவும் வெளிதோன்றாமல்
எல்லோரும்சொல்லிவைத்த நூல்கள்தோறும்
மலைத்துமேபோவதல்லால் வழிகாணாது 7
மகத்தானமுனிவர்கட்கேன் மறைப்பென்றேனே.

மறைத்ததனால்இவர்களுக்குப் பாவம்வுண்டு
வழிகாணாதலைந்தழிந்தோர் அநந்தகோடி

இறைத்ததனுல்ஏதுபலன் கண்டால்அன்றோ
ஏறவிட்டேணிதனைத் தாழ்த்துவார்போல்
உறைத்தபொருள்தெரியாமல் அலைந்தார்ஐயோ
உண்டென்றுநம்பிநம்பி உலகில்தானே
படைத்தமனுக்கெட்டலைந்த பாபம்எல்லாம்
பழிவரும்என்றெண்ணியல்லோ உரைசெய்தேனே. 8

## சித்தர்கட்கும் நந்தீசுரருக்கும் தர்க்கம்.

உரைசெய்வேன்தவமுனிவர் ஒளிப்பைஎல்லாம்
உத்தமனே அவர்பூட்டைத் திறப்பார்உண்டோ
மறைசெய்தப்பொருளையெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
மகத்தானசித்தர்களும் கோபம்கொண்டு
நிறைசெய்தேஎந்தனுடன் வாதுபேசி
நிராகரிப்பாய்வாதாடிச் சண்டைசெய்தார்
பறைசெய்தசிவனும்என்மேல் கோபம்கொண்டார்
பாயஎன்றுரிஷபமாய்ப் பதுங்கினேனே. 9

பதுங்கினேன்ஆதிசிவன் என்னைப்பார்த்து
பதஞ்சலியாய்நிரஞ்சனமாய்ப் பாதம்தூக்க
ஒதுங்கினேன்தயவுஅவர் என்மேல்வந்து
ஓகோகோநந்திவா என்றுசொன்னார்
[]இதங்கினார்அவர்முன்பு மண்டிபோட்டு
இருந்தனடாஎனக்கொருவர் எதிரேஇல்லை
சதங்கியேவனையில்உள்ள சாரைப்பாம்பைச்
சாதகமாய்நாட்பழக்கம் தான்செய்வாயே. 10

## சிங்குவைசாதகம்.

செய்துகொண்டுவருகையிலே கரிசாலைநெய்யும்
சேரஒன்றாய்க்கலந்துகொண்டு கபத்தைப்போக்கு
நைதுகொண்டுகபக்கட்டு போகும்போது
நன்றாகவனையின்உள்ளே சாரைப்பாம்பை
நெய்துகொண்டுதர்ஜநி மத்யமையினாலே
நினைவாகஓடுகிற மதியைவாங்கிக்
கொய்துகொண்ட அம்மதியை ரவியில்சேர்த்தால்
குறுகுமடாபாம்புநின் றாடாதுபாரே. 11

[]இதங்கினார்மரூஉமொழி, சித்தபுருஷாள், தேசபாஷைஎன்ப தேசியம் எனினும் அது.

## இரவிமதி அங்கி தாரணை.

பாரேநீரவிதனிலே நிற்கவேண்டும்
பரம்பொருளைச்சுழிமுனைவெளி காணவேண்டும்
சேரேநீமதியமிர்தம் கொள்ளவேண்டும்
சிவசிவாவாசிநிலை அறியவேண்டும்
கூரேநீவளையின்உள்ளே சாரைப்பாம்பைக்
கொண்டுசெல்ல அமிர்தம் அங்கேஇறங்கும்பாரு
காரேநீ அகக்கசடு அகன்றுபோகும்
கண்மணியேஎன்மகனே கண்டுகொள்ளே. 12

## அமிர்த தாரணை.

கொள்ளுவதுவாசிஅங்கே செல்லும்போது
குணமானஅமிர்தவழி கண்டவாசி
விள்ளுவதுஒருபோதும் இல்லைஇல்லை
மிஞ்சாதுஅரவம்அது படுக்கும்வீடு
தள்ளுவதுபாசவினை இருக்கும்ஆகில்
தன்மனதுஒருமைகொண்டு நில்லாதப்பா
தெள்ளுவதுசுழிமுனையில் தீபம்கண்டால்
திடமாகக்கற்பம் அறிந்துண்ணுவாயே. 13

## வாசிலயம் வாய்வுலயம் எனினும் அது.

உண்ணுவதுமதிதேய்ந்து ரவியில்சேர்ந்தால்
உன்தேகம்அழிவதில்லை பிரகாசிக்கும்
சண்ணுவதுசந்திரன்என்ற மூச்சைவாங்கித்
தான்கொள்வாய்இரண்டொன்று தப்பாமல்தான்
எண்ணுவதுமதிதேய்ந்து ரவியில்சேரும்
என்மகனேசூரியனில நில்லுநில்லு
பண்ணுவதுசூரியனில் நிற்கும்போது
பார்க்கலாம்சுழிமுனையில் தீபம்தானே. 14

## காயசித்திமுதலியசித்திகள்-௨௫-ம்- சித்திக்கும்என்கின்றது.

தீ* பமதுகண்டவுடன் தேசம்சித்தி
திரமானவாசிசித்தி யோகம்சித்தி
போகமதுஅமிர்தம் உண்ணக்கட்டும்பாரு
பொல்லாதமாய்கையது விலகிப்போகும்

* பகரத்திற்குக்ககரம் இனவெதுகையாகவந்தன.

தாகமது இல்லையடா பசியும்இல்லை
சர்ப்பனையாய்க்கொல்லுகின்ற பாசம்இல்லை
மோகமதுஒருபோதும் இல்லைஇல்லை
மோனம்என்றசத்தி அங்கேகாணலாமே. 15

காணலாம்ரிஷிமுனிவர் வார்த்தைசொல்வார்
கருக்குருவும்நன்றாகக் காண்பிப்பார்கள்
ஊணலாம்புவிதனிலே யுகாந்தகாலம்
உன்தேகம்எப்போதும் அழிவதில்லை
தோணலாம்பிறவிஎன்ற பாசம்போச்சுத்
துடங்கினதோர்தொழில்கள் எல்லாம்சித்திஆகும்
ஆணலாம்புவிதனிலே ஆசைதள்ளி
அகண்டபரிபூரணத்தில் அறிவாய்நில்லே. 16

## சகலமும் மனோமயம் என்கின்றது.

அறிவல்லோமனம்என்ற பேய்க்கூத்தெல்லாம்
அடித்தகற்றிஅறிவொன்றாய் திருத்திக்கொண்டு
தெரிவல்லோபிரபஞ்ச மாயைதள்ளித்
தேரஎன்றால்வெகுநாள்தான் செல்லுமோசொல்
முறிவல்லோபெண்டுபிள்ளை மாயைஎல்லாம்
முன்தேடும்பொருள்களிட ஆசைதள்ளி
நெறிவல்லோபுருவமையத் தொளியில்நின்று
நேசம்வைத்துமதிவாங்கி ரவியில்சேரே. 17

## எல்லாம்தன்மயமாதல்.

சேரப்பாரவியில்நின்று ஒளியைப்பாரு
தீர்க்கமடாசுழிமுனையின் தீபம்போல
ஆரப்பாஉனக்கீடு சொல்லப்போறேன்
ஆநந்தம்ஆச்சரியம் நடனம்காணும்
தேரப்பாமனம்தேறித் தெளிவதானால்
ஜெகம்முழுதும்ஜெகஜ்ஜாலம் என்றுதள்ளு
பாரப்பாமதிதேய்ந்து ரவியில்சேர்ந்தால்
பரமகுருநீ ஆவாய் பாருபாரே. 18

## முடிந்தமனோலயத்தில் சதாமுயற்சி.

வேறு.

பாரும்சுழிமுனை பகர்ந்தபருவத்தில்
தேநும்மனது தேராமல்ஓடிடும்

கூரும்குரங்கைக் குலையவிடாமல்
சீறும்அரவம் சேர்ப்பது திண்ணமே. 19

## கற்பம் உண்கையின்பலன்.

திண்ணம்பிறக்கச் செப்பியகற்பம்
உண்ணப்பிறவி ஒழிந்திடும்பாரு
வண்ணமாம்மதியைவங் என்றுவாங்கிடு
அண்ணலை ரவியில்அங் என்றுநின்றிடே. 20

## கற்பம் உன்கையில் வாசிப்பழக்கம் விடப்படா தென்கின்றது.

நின்றிடக்கண்டு நிறுத்தியரவியும்
பொன்றிடமதியைப் போகவிடாமல்
கன்றிடச்சென்று கருதியேஊது
விண்டிடும்போது விடுகசிங்என்றே. 21

சிங்எனவிட்டதிடம் அதைக்கேளாய்
தங்கெனநின்று தவறுபடாமல்
பொங்கெனநின்று பொருந்திநிறுத்திடு
இங்கெனநின்று இருந்திடும்பாரே. 22

இருந்திடும்போது இருகண்ணும்மூடிப்
பொருந்திடும்மாய்கைப் பூட்டைஆடாதே
தெரிந்திடும்ஆசையைச் சிக்கெனத்தள்ளி
உறைத்திடும்அன்னம் ஒருபொழுதுண்டிடே. 23

## கற்பம் உண்கையில் பத்தியம்.

உண்டிடும்அன்னம் ஒருபோதுகொள்ளு
சண்ணிடும்பாசிப் பயறதுகூட்டிடு
எண்ணிடும்ஆவின் நெய்யும்பால்கொள்ளு
உன்னிடமாக உறைக்குவள் சத்தியே. 24

சத்திகிருபை தயவாய் இருந்திடும்
முத்தியும்உண்டு மோட்சமும்ஆகும்
நித்தியும்நடநம் நிரந்தரம்செய்யும்
புத்தியுள்ளோரைப் புனிதமாய்ச் சேர்த்திடே. 25

## சற்சங்கம் வேண்டு என்கின்றது.

சேர்த்திடவேண்டாம் திருடர்வஞ்சகரைப்
பார்த்திடவேண்டாம் பரமலோபியரை
ஏற்றிக்கழித்திடும் இடும்பர்கசடரை
சாற்றிப்பழிப்பவர் தமைத்தள்ளிநில்லே. 26

## அபசாதகர்க்கருமானம் வெளிவிடில் சாபம்வரும் என்கின்றது.

வேறு.

தள்ளினதால்உனக்குவெகு புண்யம்உண்டு
சண்டாளாபொருள்அவர்க்கு விள்ளொண்ணாது
துள்ளிமனம்அறியாமல் பேசினக்கால்
றுஞ்சியேஅவன்சிரசு வெடித்துபோகும்
கொள்ளிஅவன்குலம்அற்று குடியும்அற்று
குரைக்கின்ற நாயதுவாம் மிருகம்ஆகி
வெள்ளிஎன்றஇடி இடித்துத் தலைமேல்வீழும்
மேதினியில்அறியார்பால் பேசொண்ணாதே. 27

## பக்குவமுள்ள சீஷனைக்கண்டு உபதேசிக்கும்மார்க்கம்.

பேசினதால்வருவதென்ன பொருளைஎல்லாம்
பிதற்றினதால்பலித்திடுமோ பேயேசொல்லு
மாசிமறுஇல்லாத நிலைமைஉள்ள
மனதைநெடுநாள்பழக்கத் தாலேகண்டு
தேசிஎன்றகுதிரைவழி நடத்தும்மார்க்கம்
செப்புவாய்ஞானம்என்ற போதம்தன்னை
வீசிவிளையாடுகின்ற காலம்பார்த்து
விளங்கவேரவிமதியின் விபரம்சொல்லே 28

## உபதேசநிலை.

விபரம்என்னபதிதேயும் வழியும்சொல்லி
மெய்யானரவியினிடப் பலனும்சொல்லி
தபரம்என்றசுயஞ்சோதி நிலையும்சொல்லித்
தமர்வாசல்பூட்டுவிடும் திறவுசொல்லி
உபரம்என்றகற்பம் உண்ணும்கருவும்சொல்லி
உத்தமனேமவுனநிலை ஊன்றல்சொல்லி

கெபரம்என்றகமனரசக் குளிகைசொல்லி
கெம்பீர அண்டத்தின் குறிசொல்வாயே. 29

## பக்குவாபக்குவர்களால் பயனெவற்புறுத்தல்.

குறிசொல்வாய்உன்மனது போல்நின்றால்
கொட்டிவிடு அவன்மனது நொந்ததானால்
நெறிதவறிஉன்தபசுக் கிடறுண்டாகும்
நேர்மைஉள்ள பிள்ளைகள் அழைத்துச்சேரு
வரிதவறிநிலைகுலைந்து மயங்கும்பேரை
வஞ்சகரைச்சேராதே வகைசொல்லாதே
பரிதவறிப்பொருள்பறிக்கும் பாவிமாரைப்
பகைத்தாலும் உனக்கிடரும் பாருபாரே. 30

பாரானசாகரத்தில் வஞ்சம்மிச்சம்
பழிகொலைகட்கஞ்சாத பாவிமாரைச்
சேராதேஒருபோதும் சேர்ந்தால்மோசம்
சேர்ந்ததனால்உனக்கு வருமானம்என்ன
நேரானபொருள்கள்எல்லாம் அறிந்துக்கொண்டு
நெகிழவிட்டுப்பிறர்சிரிக்க நிசிதம்பண்ணிக்
கூரானஜடலம்அதற் கிடைஞ்சல்செய்துக்
கோள்சொல்லிக்கைப்பொருளைக் கொள்வார்பாரே. 31

பாரேநீஉலகினில் சத்தியமேஇல்லை
பதிவானநிஜம்இல்லை பொய்யைச்சொல்லி
வேறேநீவஞ்சகங்கள் அறியாமல்தான்
மெய்ஞ்ஞானபூரணத்தின் லகிரியாலே
கூறேநீசாஸ்திரத்தின் பொருளைஎல்லாம்
கொட்டினதால்சித்தரிடச் சாபம்எய்தும் 23
காரேநீஉன்ஜடலம் போல்தான்மக்காள்
கருதாதே பிரபஞ்ச மாயைத்தள்ளே. 32

தள்ளினால்யோகமுடன் ஞானம்சித்தி
தயங்காமல் தமர்வாசல் திறக்கும்சித்தி
அள்ளினால்அமிர்தமுடன் கற்பம்சித்தி
அருள்பெருகும்ஜோதிஎன்ற தீபம்சித்தி
தெள்ளினால்தொட்டதெல்லாம் சித்திஎன்று
சித்தர்களும்முனிவர்களும் மனதுகூர்வார்
விள்ளினால்சகலமுமே சித்திஆகும்
மெச்சுவார்தவம்அதனில் மிக்கோர்தானே. 33

## ஞானநெறி.

தானானஞானத்தின் வழியைச்சொல்வேன்
தண்மையுடன் பெருமைதனைத் தள்ளவேண்டும்
தேனானஎவ்வுயிர்க்கும் இரங்கவேண்டும்
தீவினைகள்வஞ்சகங்கள் செய்யக்கூடா
கோனானகுருபதமே கெதியென்றெண்ணிக்
குறித்திடமேநிலையாகக் கூர்ந்துக்கொண்டு
வானானமதிதேயம் பழக்கம்பண்ணி
மக்களேரவியில்மனம் வைத்துநில்லே. 34

## மனோலயத்தின்பேறு.

வேறு.

நின்றுமதியை நெருக்கிஇழுத்திடு
கண்டுரவியில் கலந்துஇருந்திடு
பண்டுமுனையில் பதியவைநேசம்
அண்டர்இருப்பிடம் அறியலாம்பாரே. 35

அறியவெகுநாள் ஆலலாம்நஞ்சம்
குறியேகெதியென் றெண்ணிஇருந்திடு
வெறியேபிடிக்கில் மெய்ஞ்ஞானபோதம்
சரியாகநின்று தழைக்காதுபாரே. 36

பாரேசுழிமுனைப் பகரார்கள்நல்லோர்கள்
வாறேமுடியில் ரவிமதிஉண்டிடில்
காரேரவியில் கனச்சூடுகொண்டு
வாறேஅமிர்தம் விழும்அதுபாரே. 37

விழுகுமேர்விஜலம் மெய்ஞ்ஞானபோதம்
விழுகுமேரவிஜம் குடிகெடும்நஞ்சு
பழகும்அதனால் மதிதேயக்காட்டில
விழுகும்மதியில் மேல்என்றார்நல்லோர். 38

நல்லோர்கள் சொன்ன ஞாயம்அறிந்திடு
விள்ளார்ரவியை மேவுவாய்வங்ஙன
அல்லார்மதியை அங்ஙன் றடைந்திடு
நில்லாதுநின்று நிறுவிக்கும்பாரே. 39

நிறுவிக்கும்போது நிருவிகற்பம்ஆச்சு
பறிவிக்கும்போது பாச்சலாம்கொப்பம்

அறிவிக்கும்அந்த அமிர்தம்அதாகும்
தெரிசிக்கச்சொன்ன தெளிந்தஜெயநீரே. 40

## சந்திரகலசாமிர்தத்தின் நாமமும்மேற்படி அமிர்ததாரணையின் பயனும் திருவுளம்பற்றுகின்றார்.

நீரானஅண்டம் நிலைத்தகோடிமுடி
வாரானமேருவில் வஸ்துநான்குண்டு
சாரானவஸ்துவுக்குச் சாற்றுவேன் நாமம்
பேரானரவியும் பெலமானகெங்கையே. 41

கெங்கையில் அக்கினி கீழேமூளமூம்பிடில்
பங்கம்இல்லாம் பற்றும்புகையது
அங்கமும்வியர்வை அழுந்திக்கசிந்திடும்
பொங்கமும்பொங்கிப் பொழுந்திடும்பாரே. 42

பொழிந்தஅமிர்தம் பொங்கியேநின்று
வழிந்தேமுழுங்க வழியைஎன்சொல்வேன்
நெளிந்தமனிதர் நிலையார்கள்போதம்
சளிந்தேஇறந்து தான்மாளுவாரே. 43

### வாசிநிலை.

வாராமல்மதியை ரவிதனில் சேர்த்திடு
தேராதசுழியில் மனதைநிறுத்திடு
வாரானகெர்ப்பம் மாயையைத்தள்ளிடும்
நீறானபோதம் நிளைக்கும்உறுதியே. 44

## சந்திரகலசாமிர்தம்-சந்திரபுஷ்கரணிஎனினும், அதுசந்திரபானம் என்றும்சிலர்.

உறுதிஎன்றெண்ணி ஒருமனம்கொண்டு
கருதியே அக்கினி கைவசம்ஆனால்
நிருவிக்கும்கெர்ப்பம் நிலைக்கும்ஜலத்தில்
பருதியைக்கண்ட பனிபோல்விலகுமே. 45

விலகுமேசந்திரன் இடப்பக்கநிலையில்
குலவுமேதுஞ்சி இருக்குமேஆகில்
அலகுமேவிந்து அகாரத்தின்வீட்டில்
பழகுமேவியர்வை ஊசிநீர் ஆகுமே. 46

ஊசிச்சுழிமுனை உச்சியின்மீதில்
நாசியின்மேலேநான் கங்குலத்தில்
வாசியின்வீடுவரபதிஆனது
பேசியபெயர்தான் பிறக்கும்முக்கோணமே. 37

முக்கோணம்விட்டு முழங்கிடும்அண்டத்தில்
சிக்கெனக்கூட்டிக் திடப்படும்போது
அக்கெனவீட்டில் அமரும்சுழிமுனை
நக்கனும் ஆயி நன்றாய் அறைந்ததே. 48

அறைந்ததைந்துபூதம் ஆடாமல் கட்டினால்
சிறந்ததோர்வாசி சிக்கென்றுநின்றிடும்
பறந்தங்கேபோகப் பாயாதுமாயை
இறந்திடும்என்று எண்ணாதேசொன்னேன். 49

சொல்லுவேன்சூட்சம் துலங்கிஇழுத்திடு
மல்லுவேன்வங்என்று வாங்கிநெருக்கிடு
நில்லுவேன்அங்என்று நிறுத்திஅழுத்திடு
வெல்லுவேன்என்றசிங்என்றுவீசிடே. 50

வீசிாவாசியை விடாமலேகட்டி
தூசிஓடாமல் துவளநிறுத்திடு
மாசியரவியில் மதியைநிறுத்திடு
பேசியநிலையைப் பேசிடுவோமே 51

பேசிடும்அண்டம் வலப்புறம்சூரியன்
ரேசியின்நிலையைச் செப்பஒண்ணாது
கூசியசந்திரன் இடப்பக்கம்அப்பா
வாசிதான்நின்று வளர்த்திடும்பாரே. 52

வளர்ந்தமுடியை வகுத்தார்கள்நல்லோர்
இளைந்தமதியால் இறந்திடவேண்டாம்
கலந்தபொறியைக் கசடறத்தள்ளி
நிலைந்தநிருமமை நிற்பதுபெரிதே. 53

நிற்பதுநிற்க நிலைதவறாமல்
சொற்பவாழ்வு துவண்டலையாதே
அற்புதம்ஆன ஆனந்தபோதம்
கற்பனை ஆகக் கண்டுகொள்வாயே 54

## கயாதிகற்பம்.

வேறு.

கொள்வதுதான்எளிதல்ல வெகுநாள்செல்லும்
குரங்கதனைக்கொம்பு தனில்பாயாமல்தான்
நல்லுவதுமனதுரிமைக் கொண்டால் அல்லோ
நாடாதஞானநிலை வலுத்துப்போச்சு
துள்ளாமல்மனம்அடங்கிச் சோதிகொண்டால்
துலங்குமடாஉன்தேகம் காந்திஆகும்
விள்ளாமல்கற்பம்அதைப் பின்னேகொள்ளு
விளங்குமடாஉன்தேகம் விழுகாதுபாரே. 55

விழுகாதுகற்பம்அறிந் துண்ணவேண்டும்
வேதாந்தசாஸ்திரத்தை விரும்பவேண்டும்
நழுகாதமாயைவிட்டு நழுகவேண்டும்
மன்என்றதீவினைக்குள் அகப்படாதே
ஒழுகாதுஞானநிலை அறிந்தபின்பு
உத்தமனேகற்பம் அறிந்துண்ணுஉண்ணு
மழுவானசிற்றண்டம் கொண்டுவந்து
மக்களேசூரியனை எடுத்துக்கொள்ளே. 56

## இரவிமெழுகு.

சூரியனைத்தான்எடுத்துப் பீங்கான்தன்னில்
சூரியன்முன்வைத்திடுவாய் நவநாள்தானும்
வீரியமும்தான்ஒடுங்கி மெழுகு ஆகும்
வெண்கருவைக்கூடவிட்டுக் கிண்டும்போது
ஆரியராம்மும்மூர்த்திக் தயிலம்விட்டு
அப்பனேரவிமுகத்தில் வைத்துப்பாரு
சோரிதரும்மூன்றும்ஒன்றாய் மெழுகாய்ப்போகும்
சொல்லொண்ணுமெழுகெடுத்துப் பதனம்பண்ணே. 57

பதனம்வெகுபதனம்அதாய்ப் பதனம்பண்ணிப்
பாலகனேதேவிமுன்பு வைத்துப்போற்றி
விதனம்என்றவிதனம்எல்லாம் தீர்ந்துபோகும்
மேன்மைஉள்ளஜடலம்அது வலுத்துப்போகும்
மதனம்என்றமன்மதன்போல் ஒளியும்காணும்
மக்களேபரவெளியுள் அடங்கிப்போகும்

அதனம்அதாய்க்கூத்து விளையாடல்ஆகும்
அப்பனேகாயாதி கற்பம்ஆச்சே. 58

ஆச்சப்பாமெழுகெடுத்துச் சூரியனில்கொள்ள
அடங்காதசந்திரன்தான் அடங்கிப்போகும்
வாச்சப்பாமெழுகுஒரு மண்டலம்தான்கொள்ளு
மக்களேமண்டலம் தான் நிறுத்திவைப்பாய்
போச்சப்பா அவமிருத்து தொலைந்துபோச்சு
பொல்லாதசெந்தீயில் பொசிங்கிப்போச்சு
நீச்சப்பாநிலையாது மாயைவாழ்க்கை
நிருவிகற்பம்உண்டதனால் நிலைக்கும்பாரே. 59

நிலையானசிற்றண்டம் வெளிவிடாதே
நிஜமானமும்மூர்த்திக் கருச்சொல்லாதே
கலையானவெண்கருவைக் காட்டொண்ணாது
காட்டினால்உந்தனிடக் கபாலம்போகும்
வலையானமாயையிலே சிக்கிக்கொண்டு
மாண்டதனால்வருவதென்ன மைந்தாசொல்லு
சிலையானசிலையதுபோல் மவுநம்பூண்டு
ஜெகத்திலேதான்திரிந்து சிவத்தைப்போற்றே. 60

போற்றுவதுமெழுகுடனே நாதம்சேரு
பொருமிநின்றமுப்பூரம் கூடச்சேரு
பார்த்திடபனே நாதம் அதில் முப்புஇட்டு
பங்கயத்தோன்முகம்காணத் தெளிவுஆகும்
நாற்றிசையும்மெச்சுகின்ற மெழுகில்சேரு
நல்லதொருமெழுகினிட வலுமைமெத்த
காற்றினிடவாடைஅங்கே பட்டதானால்
கருக்குமடாமெழுகினிடக் காரம்போமே. 61

காரம்போம்மெழுகினிட வலுவேபோகும்
கசிவுகொண்டுமெழுகதுதான் இறுகாதையா
வீரம்போம்உட்கொண்டால் வலுச்செய்யாது
விஞ்சைஎன்றஜோதிமயம் தோன்றாதையா
சாரம்போம்வாசிஅது அடங்காதையா
தன்மையுடன்கைபாகம் தப்பிற்றானால்
ஆரம்என்றஅண்டத்தின் மெழுகுபோலே
ஆச்சரியம்ஒன்றும்இல்லை அதீதம்தானே. 62

அதீதம்என்றசூரியனில் வனுவோமெத்த
அம்மம்மா அதன்பெருமைச் சொல்லொண்ணுது
பதீதம்என்றதொழில்கோடி தொந்தம்கோடி
பாச்சினுல்வேதை அது கண்கொள்ளாது
விதீதம்என்றஅஷ்டகர்மம் நொடிக்குள் ஆகும்
விஞ்சைஎன்றதொழில்கோடி விநோதம்கோடி
வதீதம்என்றசந்திரனில் மெழுகுசொல்வேன்
மகத்தானபொருள் எனவே மனதில்கொள்ளே. 63

## மதிமெழுகு.

கொள்ளடாசந்திரனை எடுத்துக்கொண்டு
கூர்மைஉள்ளசவ்வதனை உரித்துப்போட்டு
விள்ளடாமஞ்சள் என்ற கருவைக்கூட
விட்டுமேரவிதனிலே நவநாள்வைத்து
சொல்லடாகொடிநஞ்சு மாவைச்சேர்த்துச்
சுரோணிதமும்கூடவிட்டு முப்புபோட்டு
செல்லடாபரியினிடக் குச்சுகொண்டு
சேரநன்ருய்த்தான்கிண்ட மெழுகும்ஆமே. 64

வேறு.

மெழுகதுபோல் விசைஒன்றும்இல்லை
நழுகாதுதேகம் நமன்அதற்கில்லை
சழூகாதுஉண்டால் ஜடலம்வலித்திடும்
பழுக்காதுரோகம் நமன்பகைபோமே. 65

பகைபோகும்என்று பகர்ந்தார்கள்சித்தர்
பகைஅறிவார்க்கு மதுரம் ஆம்கற்பம்
தகைபோகும்என்று தான்மறைத்தார்கள்
துகையாம்கருவைச் சொல்லஒண்ணுதே. 66

சொன்னுல்தெரிந்திடும் சுகமானஅண்டம்
என்னுல்வெளியாய் எளியவர்க்கிரங்கி
முன்னுல்முநிவர் புதைக்கருஎல்லாம்
தன்னுல்புலம்பச்சபையில் சொன்னேனே. 67

சொன்னேனேயானும் துறைஒளியாமல்
விண்டேனேஎன்று வேண்டியசித்தர்கள்

கண்டேனேஎன்று கருதினார்முனிவர்கள்
பண்டேனேஎன்று பலவிதம்சொன்னாரே. 68

சொன்னமொழியைத் துறைதப்பிச்செய்தல்
பண்ணும்தொழிலில் பலவிதம்காட்டும்
எண்ணும்மனதுக் கின்பம்கொடாது
முன்னேமொழிந்த முறைதவறாதே. 69

தவறாதேசொன்னேன் சவுங்கலைமூலம்
தவறாதேசிற்றண்டம் தான்அதுஆகும்
தவறாதேசித்தர் தயதொளிப்பெல்லாம்
தவறாமல்சொன்னேன் சத்தியம்தானே. 70

சத்தியம்என்றுதான் இருந்தோர்க்கு
முத்திஎன்கின்ற மோட்சமும்உண்டாம்
பத்தியாய்நின்று பார்க்கின்றபேர்க்கு
சித்தர்மொழிந்த திரைஎல்லாம்வெளியே. 71

வெளிஆகும்என்று விமலனார்சொன்னார்
பழியாமரோமன் பாடினான்சிங்கு
நெளியாமல்வங்கம் நெறிவெட்டை-ஆனால்
கழியாமல்வெளியும் கட்டுரைத்தாரே. 72

## மாரணக்கரு.

மறைத்தபொருளை வகைவிபரம்ஆக
நிறக்கவேசொல்லினன் நெறிதவறாமல்
குறிக்கும்குருஅது கோடிகவறாகும்
பறிக்கும்பொருள்தான் பசுவையும்ஆமே. 73

ஆகுமேசந்திரன் அண்டம்எடுத்து
ஏகுமேபிங்கானில் இட்டிடத்தண்ணீர்
வேகுமேபொங்கி மெழுகதுஆகும்
சாகுமேமாரணக் கருஅதுஆமே. 74

கருஅதுசொன்னேன் காரணக்குருவை
இரவதுபகலும் இருதயம்வைத்து
மறவதும்இல்லை மகத்தானபோவம்
திறமதுசொன்னேன் செந்தீமூலமே. 75

வேறு.

மூலம்என்ற சுத்தரவி வெளியும்ஆச்சு
முன்னோர்கள்சொல்வதைக் கேட்டிலாயோ
ஆலம்என்றபேரண்டம் விண்ணிலேதான்
அப்பனேரவிமதியும் அங்கேஉண்டு
ஜாலம்என்றஉந்திதனில் ரவிமதியும்உண்டு
சண்டாளா அண்டபிண்டம் ரவிமதியும்ஆகும்
கோலம்என்றசரக்குகளும் ரவிமதியும்ஆகும்
கூர்மைஉள்ளஉப்பதுவும் ரவிமதியும்ஆகும். 76

## ஆகாரஉகாரதீட்சை.

ஆகுமேசித்தர்கள்தான் மறைத்தபொருள்எல்லாம்
அப்பனேவெளிதோன்றச் சொன்னேன்யானும்
ஏகுமேஅகாரம்என்ற கருவைஎல்லாம்
என்மகனேசொல்லுகிறேன் நன்றாய்த்தானும்
போகுமேஊசிநீர் அகாரம்ஆகும்
புண்ணியனேவிந்துஅல்லோ அகாரம்ஆகும்
மாகுமேகுடத்துநீர் அகாரம்ஆகும்
மக்களேஅகாரம்அது அமிர்தம்ஆமே. 77

அகாரம்என்றசந்திரன்ஆம் வாசிதானும்
அப்பனேஆகாரம்என்ற பொருள்தான்ஐயா
உகாரம்என்றபொருளை அல்லோவெளியில்தோன்ற
உத்தமனேஅண்டம்என்ற பொருள்தான்என்றும்
சிகாரம்என்றசிற்றண்டம் ரவிதான்என்றும்
சின்மயமேவிளங்கிநின்ற உகாரம்ஆகும்
நிகாரம்என்றபிண்டம் அடா உகாரம்ஆகும்
நிலையானபேரண்டம் உகாரம் ஆமே. 78

## மகாரதீட்சை.

உகாரம்என்றஉவர்ப்பூவும் உகாரம்ஆகும்
உத்தமனேரவிபூஜம் உகாரம்ஆகும்
வகாரம்என்றபொருள்எல்லாம் உகாரத்தாலே
வகைகண்டுசெய்வோர்க்குப் பலிதம்ஆகும்
மகாரம்என்றஅண்டத்தில் கோடிதொந்தம்
மக்களேசித்தர்செய்யும் வகைஇதாகும்

அகாரம்என்றபொருள் அதுதான் உகாரத்தில்சேர்ந்தால் 79
அப்பனேசித்துவிளை யாடல்ஆமே.

## அஷ்டகர்மம்.

ஆடலாம்இன்னம்ஒருசித்துகேளாய்
அப்பனேஅஷ்டகர்மம் அறுபத்துநான்கும்
தேடலாம்இக்கருவைக் கொண்டேஆடி
ஜெபிக்கலாம்இத்தொழிலும் திரம்அதாக
நாடலாம்உன்னைவெல்லார் உலகில்இல்லை
நாதாக்கள்மெச்சும்இந்தக் கருவுதப்பா
பாடலாம்அடக்கம்உள்ள கருவைத்தானும் 80
பதனமடாபதனமடா பித்துநஞ்சே.

## மரணவித்தை.

வேறு.

பித்துநஞ்சுகொடியதுகூட்டி
மத்தெனத்தயிலம் வாங்கியேகொண்டு
எத்துடன்எட்டி விரைத்தயிலம்சேர் 81
பத்துடன்தில்லைத் தயிலமும்கூட்டே.

கூட்டியசேகரி பித்தைஎடுத்து
வாட்டியசந்திரன் அண்டமும்சேர்த்திடு
பூட்டியேஅண்டம் வலப்புளித்தயிலம் 82
நீட்டியவீரமும் பூரமும்சேர்த்திடே.

சேர்த்திநாபி வெள்ளையும்கெவுரி
போற்றிடுஉள்ளியும் பொற்கடுக்காயும்
மாற்றீசரியாய் வகையதுகொண்டு 83
ஆற்றிடும்தயிலம்இவ் விதமாய்அரைத்திடே.

அரைத்துவழித்துவை மேதிபின்சிமிழில்
உரைத்துவைபூசை உமையாள்தன்மூத்தாள்
பரைத்திடுதூபதேவி நசிநசிஎன்று 84
கரைத்திடும்ஆயிரத் தெட்டுருஆமே.

உருவதுதீர்ந்து ஒடுக்கத்தில்வைத்திடு
அருவதுஆக ஐங்காயம்கேளாய்
தருவதுமஞ்சள் கடுகுவெள்ளுள்ளி 85
பருவதுகாயம் வெந்தயம்ஆமே.

ஆமதுவெள்ளை கெவிரியும்வீரம்
போமதுபூரம் புழுகுடன்பூநீர்
தாமதுஎல்லாம் சரியிடைக்கூட்டி
நேமதுகுருவும் நேயமாம்இடையே. 86

இடையதுசேர்த்து இளகஅரைத்திடு
மடையனேமத்தன் தயிலத்தால்ஆட்டி
விடையதுஉருளாய் வேண்டிஎடுத்திடு
உதையவன் கருவை ஒக்கவும் வைத்திடே. 87

வைத்துவுருவின் வயிற்றைக்கருத்திடு
நைத்துநடுவில் நாமமும்சாத்தி
தைத்தகருவை விழிமுதல்தீட்டி
நித்தியபூசை நேசமாய்செய்திடே. 88

செய்திடும்போது தீராதநுன்பமாம்
நொய்திடும்உடலும் நோக்கறியார்கள்
நெய்திடஎன்றால் நறுக்கிடுபாவையை
வைதிடமரணம் வளமதுபாரே. 89

வளமதுஆக வயணமும்கேளாய்
குளமதுதனிலே கொண்டுபோய்ப்பாவையைச்
சளமதுதீரத் தண்ணீரில்கரைத்து
உளமதுஆக ஓம்என்றுஊற்றிடே. 90

ஊற்றியபின்பு ஓடுமேபீடை
மாற்றியேவந்து வரைந்திடுதகடு
நேற்றியதாகச் சிவயநமஎன்று
சாத்தியநாமமும் தான்வைத்துக்கட்டிடே. 91

கட்டியபின்பு கழிந்திடும்பீடை
எட்டியகருவை எடுத்திடுதோளில்
சுட்டியர்இடத்தில் செல்லஒண்ணாது
மட்டியனேகேள் வைத்துவிளையாடே. 92

வைத்தகருவை வகைஒருவர்க்கு
உற்றதுசொல்லி உடைத்திடவேண்டாம்
சத்தியம்சொன்னேன் தலைதான்தெரித்திடும்
புத்தியதாகப் புனிதம்பதனமே. 93

பதனமதாகப் பதனமேபண்ணி
விதனமும்வந்தால் விளையாடிப்பாரு
அதனமதாக ஆடலும்வேண்டாம்
இதனமதாக இடுக்கம்செய்பாதே. 94

செய்தார்கிந்த திடமானகருவை
நொய்திடச்செய்தால் நோக்கும்முன்பழியாம்
பைதிடப்பழகிப் பயந்துநயந்திடு
வைதிடஉலகம் வளமாய்வணங்குமே. 95

வணங்கும் இக்கரு மாட்டிடும்ஒடுக்கி
இணங்கியசாஸ்திரம் எல்லோரும்சொன்ன
பணங்கியநூலில் பாடியமோடி
துணங்கியே அஞ்சனம் சொன்னேமேசூட்சம். 96

## அஞ்சனம்.

சூட்சமதாகச் சொல்லுகிறேன் அஞ்சனம்
பாச்சலாம்இந்தக் கருவைநீகேளாய்
ஏச்சலாம்இந்தச் சந்திரன்மெழுகை
நீச்சலாம்நீசன் பித்துடன்கொடியே. 97

கொடியதுநஞ்சு கூட்டரும்புற்றில்
வடியுமேபூச்சி ரெண்டதுஉண்டு
அடியுமேஅண்ட ஓடதில்கருக்கித்
தடியுமேஅண்டத் தயிலத்தில்ஆட்டே. 98

ஆட்டியமையைச் சிமிழ்தனில்வைத்து
காட்டியேதீபம் அஞ்சனதேவியை
வாட்டியே-வங்-அங்-கிலீம்-என்றுசொல்லியே
மூட்டியஉரு மூவாயிரம் ஓதிடே. 99

ஓதிட்டெடுத்து உரைத்ததோர்சாஸ்திரம்
வாதிட்டப்படியே வளமாகக்கூட்டிடு
பேதிட்டபூமி பிளந்துதெரிந்திடும்
சாதிட்டம்ஆகச் சத்தியம்ஆமே. 100

சத்தியம்ஆகச் சதிராய்நினைத்திடு
முத்திஅதாகிய மோட்சமும்உண்டு
பத்திஅதாகப் பணிந்துஇக்கருவை
நித்திரையாலும் நினைக்கவேண்ணாதே. 101

நினைத்துப்புவியினில் நிகழ்த்தவொண்ணாது
சணத்தில்வெடித்திடும் தப்பாமல்உன்தலை
கனத்தபொருளைக் கண்டாலும் விள்ளாரா
குணத்தைஅறிந்து குறிசொல்லுவாயே. 102

சொல்லாதபேயைத் துரத்திஅகற்றிவை
நில்லாதுகாயம் நிலைக்குமோபாரு
பொல்லாதபிறவிகள் பூமியில்மெத்த
தள்ளாமல்தள்ளித் தனித்திருப்பாயே. 103

பாரேநீசித்தர்கள் பகரார்கள்இக்கரு
நேரேநீகண்டு நின்றுடும்சித்தி
வாரேநீஇக்கரு வாய்த்திடும்வேளை
தூரேநீஉள்ளே துடருவார்பாரே. 104

துடருவார்என்று சொல்லாதேஇக்கரு
படராதுலகம்பழி கொலைசெய்திடும்
அடராதுமிஞ்சி அழும்புகள் செய்தால்
கடல்அதுதள்ளிக் கரையேறுவாயே. 105

## வசியம்.

கரைஏறும்அத்திரம் கட்டகச்சொல்வேன்
மறையாமல்முன்னோர் மறைத்தார்கருவை
இறையானசூட்சம் இக்கருஅப்பா
குறையாமல்செய்தால் குணமாய்உரைத்திடே. 106

## வசியம்.

உரைகிறேன்வசியம் உலகம்வணங்கிடத்
தரைக்கிறேன்வெள்ளை ஆவாரைமூலம்
இறைக்கிறேன்தயிலம் இதமாய்எடுத்திடு
மறைக்கிறேன்சந்திரன் மையதுசேரே. 107

சேருநீபுனுகுடன் சேர்த்துக்கோரோசனை
வாருநீமஞ்சள் தயிலமும்சேர்த்திடு
பாருநீபித்துடக் கருவையுங்கூட்டிடு
ஆருநீநன்றாய் அரைத்துவழித்திடே. 108

வழித்துமேசிமிழில் மையதைவைத்திடு
தெளித்துமேபூசையில் தேவியைபோற்றிடு

களித்துமே-வசிவ-என் கருதியேஓது
அளித்துமேஉலகம் அடிபணிந்திடுமே. 109

அடிபணிந்துன்னிடம் அடிமைஆள்ஆகி
இடிபணிந்தேவல் என்னெனக்கேட்பார்
வடிபணிந்தேபொருள் வருத்துங்கேட்பமர்
முடிபணிந்திடுவர் முறைதெரிந்தாடே. 110

## ஆக்ருஷணை.

ஆடியஆக்ருஷணை அதுகேளாய்
தேடியஅரசின் வேரைஎடுத்திடு
கூடியதயிலம் இறக்கிவடித்திடு
வாடியபித்தை வளமாய்எடுத்திடே. 111

எடுத்ததோர்பித்தை இதமாய்அரைத்திடு
கொடுத்திடும்தயிலம் கூடவேவிட்டிடு
வெடித்ததோர்புனுகு கோரோசனைகூட்டிடு
நடித்திடக்கான சந்திரன்மெழுகே. 112

மெழுகுடன்நீசன் பித்துமேகூட்டி
நழுகுறநன்றாய் அரைத்துவழித்துத்
தழுவுறும்தந்தச் சிமிழில்அடைத்திடு
ஒழுகுறப்பூசையில்-சிவகிலீம்-என்றிடே. 113

என்றிடப்பரியின் தகடதுசெய்திடு
நன்றெனஉடலின் சக்கரம்எழுதிடு
வென்றெனப்பட்சி எழுத்தைப்பதித்திடு
கன்றெனநாமமும் கருவையும்பூசிடே. 114

பூசிட்டபூசையில் போற்றியேவைத்திடு
நேசித்ததன்உரு நேரானநூற்றெட்டு
ஆசித்தபேர்களும் அப்போதேவந்திடும்
பேசிட்டமோகனம் பேசுவேன்கேளே. 115

## மோகனம்.

கேளதுமோதினம் கெட்டியதாய்விடும்
பாழதுஇல்லை பலிப்பதுதிண்ணமே
கூழதுசம்பழும் சமூலமேவாங்கிடு
வேளதுஆகத் தயிலமும்இறக்கிடே. 116

இறக்கியதயிலம் இகமாய்எடுத்திடு
பறக்கிறகிளியின் பித்தைப்பகுத்தெடு
பிறக்கியசந்திரன் பித்துமேகூட்டிடு
வறக்கியமஞ்சள் தயிலமும்சேர்த்திடே. 117

சேர்த்துமேதாரம் கோரோசனைகூட்டியே
ஆற்றுமேநன்றாய் அழகாய்அரைத்திடு
பார்த்துமேபூசை பதிவாகவைத்திடு
ஏர்த்துமே-வங்-சிங்-கிலீம்-என்றுஓதிடே. 118

ஓதியமையை உன்புருவத்தில்
நீதியாய்வைத்து நினைத்தபேர்சொல்லில்
ஜாதிகள்நீங்கித் தன்வசம்ஆகும்
ஆதியாமம்ருவை அடக்கிவைப்பாயே. 119

## பேதனம்.

அடக்குவதென்ன பேதனம்அறிவாய்
முடக்தும்முறையை மொழிந்திடும்போது
திடக்கும்கருவைச் செப்பஒண்ணாது
மடக்கும்பேதனம் வகைஅதுகேளே. 120

வகைஅதைக்கேளாய் வரும்குமத்தின்
தகைஉறத்தயிலம் சமர்த்துடன்வாங்கிடு
பகைஅறக்கேசரி பித்துடன்சேர்த்திடு
நகைஅறநன்றாய் நாடிஅரைத்திடே. 121

அரைத்திடுசந்திரன் பித்துமேகூட்டி
உரைத்திடுகாந்தம் ஒக்கவேவைத்திடு
நரைத்திடுநன்றாய் அரைத்துவழித்திடு
திரைத்திடும்மேதியின் சிமிழ்தனில்வைத்திடே. 122

வைத்திடுபூசை-மங்-சிங்-பங்-என்று
செய்திடுஉருவில் நூற்றெட்டேஆனால்
தைத்திடும்காரீயத் தகட்டினில்உருவை
மைந்திடுநாமும் மையதில்பூசிடே. 123

பூசியேபூசை புகழ்பெறவைத்திடு
வாசியேநிறுத்தி மதிதனில்ஏற்றிடு
தேசியின்குதிரைக்கால் கீழேபுதைத்திடு
தோஷியும்ஓடித் துவண்டலைவானே. 124

அலைவதுதிண்ணம் அதையும்எடுத்திடு
குலைவதுஎக்கியம் குணமாகச்செய்திடு
நலைவதுசாம்பல் நன்றாய்எடுத்திடு
மலைவதும்இல்லை பாலில்கரைத்திடே. 125

கரைத்துமேதண்ணீரில் கலந்துகுழப்பிடு
அரைத்துமேஐயைந் தறையில்சிதம்பரம்
முறைத்துமேசிவயநம என்றுவைத்திடு
நிரைத்துமேபித்தன் தனக்குநீகட்டிடே. 126

கட்டிடும்போது கலவாதுபீடை
விட்டிடும்வெறியும் வெளிஏறிப்போவான்
தொட்டிடும்தம்பனம் சொல்லுவேன்கேளாய்
மட்டிடும்போது வகையாகத்தானே. 127

## தம்பனம்.

தானானசூரியன் மூலம்கொண்டுவா
ஏனானதயிலம் இறங்கிஎடுத்திடு
ஊனானஓனான் பித்தைப்பகுந்தெடு
வீணானகேசரி மண்டைத்தயிலமே. 128

தயிலமும்கூட்டிச் சந்திரன்பித்துடன்
அயிலமதாக அரைத்துஎடுத்திடு
துயில்மொழியாள்தன் துடக்கதுசுட்டு
மயல்விழிமைஎன நன்றாய் அரைத்திடே. 129

அரைத்துசிமிழ்தனில் அன்புடன்வைத்து
உரைத்திடும்பூசையில்-ஓம்-நம்-என்றாயிரம்
திரைத்திடும்உருவைச் செபம்பண்ணிவைத்திடு
மறைத்திடும்மண்டையின் ஓட்டில்வரைந்திடே. 130

வரைந்தஉருவில் வகையுடன்நாமம்
பரைந்தகருவைப் பதிவாய்த்தடவியே
நிறைந்ததோர்வஸ்துடன் நேமமாய்ப்பூசைசெய்
குறைந்ததோர்காளிக் கோவில்வைத்திடே. 131

வைத்திடும்போது வாய்பேசார்கள்
தைத்திடும் கால்,கைநாடவும்போகா
கைத்திடும்பிரமை தானது ஆகும்
எய்த்ததோர்பின்புஎ டுத்திடுவாயே. 132

எடுத்துமேகருவை இதமாய்க்கழுவிடு
படுத்துமேபாவையைத் தண்ணீரில்விட்டிடு
கொடுத்துஉச்சாடனத் தகடதுகட்டிவை
விடுத்துமேபோகும் வெளிஏறுவானே. 133

வெளிஏறிவந்து விதிஉள்ளமட்டும்
சலியாமல்நின்று தான்வாழுவானே
பழியாகஎன்றால் பண்ணியதொழிலைக்
குழியாகமூடிக் கொண்டெரிப்பாயே. 134

எரித்திடும்போது இறந்திடும்காயம்
பரித்திடும்எக்கியம் பண்ணினால் இல்லைத்
தறித்திடும்பாவம் தான்வந்துசுற்றும்
குறித்திடும்என்று குணமாய்எடுத்திடே. 135

## உச்சாடனம்.

குணமாம்உச்சாடனம் கூறுவேன்கேளாய்
வளமானபேயின் குமுட்டிசமூலம்
இனமானதயிலம் இறக்கிஎடுத்திடு
கனமானகாக்கையின் பித்தைஎடுத்திடே. 136

பித்தைஎடுத்திடு பெருநரிமண்டையின்
சத்தையும்கூடவே சந்திரன்மெழுகுவை
நத்தையும்ஈசன் பித்தைஎடுத்துவை
வைத்தகைநன்றாய் அரைத்துவழித்திடே. 137

வழித்துச்சிமிழ்தனில் வளமாகவைத்திடு
குழித்துமேபூசை குணமாகச்செய்துவை
அழித்திடும்பேரை அண்டோட்டுருவை
தழித்திடஆயிரம்தான் உருசெய்யே. 138

செய்படாபூசை திரயாகச்செய்தால்
உய்படாமட்டி உரையடாஉருவைச்
செய்படா-மங்-கங்-சங்-என்றுசாற்றிப்
பொய்படாபோகாமல் பொருந்தியேசெய்யே. 139

செய்தேஎடுத்திடு சீர்பேர்உடையவன்
கொய்தவன்காலில் கீழேபுதைத்துவை
நொய்தவன்ஓடி நடங்குவான்சாம்பவில்
வைதவன்கேட்டு பதம்கொள்ளுவானே. 140

கொள்ளுவான்என்று குறியாய்இருந்திடாய்
விள்ளுவான்வெறியில் பேய்பிடித்தவன்போல்
துள்ளுவாள்சண்டி சுடுகாடுபோகத்
தள்ளுவான்வீணே தான்இருக்காதே. 141

இருக்காமல்நீதான் எடுத்திடுபுண்ணியம்
நறுக்காமல்பாவையை நற்பாலும்தண்ணீரும்
குறுக்காமல்சேர்த்துக் குணமாய்க்கழுவிடு
பருக்காமல்தம்பனத் தகடதுபோடே. 142

போடவேபூசைப் புகழாய்வயிரவன்
தேடவேகோயிலில் செய்ததுசேரவை
வீடதுவிட்டு வெளிப்போகமாட்டான்
கூடவித்வேஷணம் குணமாகச்செய்திடே. 143

## வித்வேஷணம்.

குணமானகங்கிலி சமூலமும்வாங்கிடு
வலமானகேசரி எருவையும்சேர்த்திடு
கனமானதயிலம் கனிவாய்எடுத்திடு
பிணமானகரியில் பிசைந்துஉரைத்திடே. 144

உரைத்திடுவழித்திடு உடன்சேருசந்திரன்
நரைத்துநாய்பித்து நஞ்சும்கொடியும்
விரைத்தவன்மண்டையில் உருவைவிளைத்து
தரைத்தவன்பேரைச் சாத்திவைசக்கரம். 145

சக்கரம்எழுதிச் சாற்றிடுஉருவை
உக்கிரமாய்-ஓதிடு-நசி-மசி-என்று
வச்சிரமாக மயானத்தில்வைத்திடு
சிக்கிரமதாகப் பெலியும்கொடுத்திடே. 146

பெலியும்கொடுத்துப் புதைத்திடும்போது
கலியான்வெறியில் கலங்குவான்பாரு
சலியாதுழன்று தவித்திடும்அன்றியும்
வலியானவெறியால் மாளுவான்பாரே. 147

மாளுவான்என்று மனம்துணியாதே
கோள்உறும்கோபம் கொடுமைசெய்யாதே
பாழுறும்பாவம் பழிகொலைக்கஞ்சி
ஏழையன்ஒன்றே எடுத்திடுபுண்ணியம். 148

புண்ணியம்தானே பொருந்தநிணைத்திடு
கன்னியர்க்கன்னம் கனிவாய்க்கொடுத்திடு
பண்ணிலன்நெய்யில் தண்ணீரும்சேர்த்திடு
மண்ணியஉருவை மறையஅழித்திடே. 149

அழுத்திடக்கரைத்து ஆற்றினில்விட்டிடு
ஒழித்திடுமோகனத் தகடதுபோடு
செழித்திடப்பீடை விலகிடும்போது
பழித்திடஉலகில் பதிலாய்இருப்பனே. 150

## மாரணம்.

இருப்பனேமாரணம் எதிராகச்செய்திடு
அருப்பனேஎட்டி சமூலமும்வாங்கிடு
குருப்பனேஅன்ன சத்தைஎடுத்திடு
வருப்பனேபித்தன் உண்டையைச்சேர்த்திடே. 151

சேர்த்துத்தயிலம் திரமாய்எடுத்துவை
பார்த்துப்பிணத்தின் தயிலமும்சேர்த்திடு
கூற்றுவன்ஆன சந்திரன்மெழுகைக்
கார்த்துஇருந்து கொடிநஞ்சும் சேர்த்திடே. 152

சேர்த்துத்தயிலம் திரமாகவிட்டதை
ஆற்றுஅலரிப் பலகையில்உருவுசெய்
மூத்தவள்பெரும் முதளாளி நாமமும்
சாற்றியேஓதித் தான்பூசுஉருவிலே. 153

உருவினில்பூசி-ஓம்-தூம்-நசி-என்று
மருவினில்விலக்கச் சீலைமேல்வைத்திடு
பருவினில்சுழல்கால் கொண்டதுமூடிவை
சருவினில்கள்ளி எருக்கலம்சுப்பலே. 154

சுப்பலால்சுட்டுத் தூள்அதைவாறி
அப்பியேபேரில் இட்டதன்மேலே
துப்பியேதூவிச்-சூ-சூ-என்று
தப்பியேபோட்டுத் தான்வருவாயே. 155

வருவாய்பிணத்தின் வரிசைஎல்லாம்செய்
சருவமும்செய்து தான்வரும்போதில்
பரிவாகமூடிப் பழிவந்துசூழும்
அறிவாகஇத்தொழில் யார்க்கும்செய்யாதே. 156

செய்யாதேபாவம் செய்திடும்போது
வையாதேகொஞ்ச நாளில்எடுத்திடு
நொய்யாதேஅஷ்ட கர்மத்துக்கெல்லாம்
மெய்யானசந்திரன் மெழுகதுஆமே. 157

## கற்பமுறை.

மெழுகதுகற்ப முறை அதைக்கேளாய்
பழுதறமுட்டை ரவிவிதைவாங்கி
தழுவறஆவின் பாலதுகூட
ஒழுகுறும்பாத்தின் ஆடதன்பாலே. 158

ஆடதன்பாலும் அரும்செவ்விளநீர்க்
கூடதுஆகக் கூட்டியேஒன்றாய்த்
தேடதுஆகச் சிறுபாண்டத்திட்டு
நாடதுரவிவிதைத் தொளாந்திரம் செய்யே. 159

செய்துமேமூடித் திரமாய்எரித்திடு
நொய்யாதுசாமம் ரெண்டதுஆனல்
பையவேவாங்கி ஆறவைகுளிர
மெய்யஅரித்தரித் தோட்டைஉரித்திடே. 190

உரித்தகருவை ஒளிதனில்வைத்திடு
கரித்தநிப்பத்தின்பழச்சாறுவிட்டாட்டிடு
பரித்தரவிதனில் மூன்றுநாள்வைத்திடு
செரித்தவெளியின் குச்சியால்கிண்டிடே. 161

கிண்டிவைமூன்றுநாள் கிடந்துசென்றுறப்
பன்றியதேனில் பகரவைமூன்றுநாள்
சுண்டியபோது சுரோணிதத்தேழுவை
விண்டிடும்போது மெழுகதுஆமே. 162

மெழுகதுகூட மெய்முலைப்பால்சேர்
அழுகதுகன்னி குடத்துநீர்விட்டிடு
பழுதறக்கிண்டிப் பதமாய்எடுத்திடு
கழுவறச்சத்திமுன் பூசையில்வைத்திடே. 163

வைத்துஎடுத்திடு வடுகனும்தேவியும்
மொத்துஇருந்திடு முன்மலைதன்னிலே
முத்தியும்பெற்று முனையிலேநின்றிடு
சத்தியமாகத் தான்இருப்பாயே. 164

இருப்பதுநாளில் இரவியில்மதிசேர
மருப்பதுதேகம் மனஇனம்இல்லை
கருப்பதுஎமன் கடக்கவேயோவான்
சிருப்பனைவிட்டுத் தெளிந்திடுமனமே. 165

மனமதுதேறி மாய்கையும்தள்ளி
குணமதுஆனால் கூற்றுவன்நீங்கும்
சனமதுஆசைத் தள்ளியும்போகும்
இனமதுவாசம் சிதறிடும்பாரே. 166

வேறு.

சிதறிப்போம்காயம்அது இறுகிப்போகும்
சிறிநின்றதாதுஎல்லாம் வலுத்துப்போகும்
கதறிப்போம்சதைஇறுகி விந்துகட்டும்
கண்ணொளியோசிவந்து முகம்காந்திஆகும்
பதறிப்போம்பாசவினை அகன்றுபோகும்
பங்கயத்தோன்கிருபை உண்டுவசியம்ஆகும்
குதறிப்போம்கூற்றுவனும் விலகிப்போவான்
கூடழிக்கும்எமன்என்ற பாவம்போச்சே. 167

போச்சுதடாமாய்கைஎன்ற பிரமைபோச்சு
பூண்டுநின்றபெண்டுபிள்ளை ஆசைபோச்சு
தேச்சுதடாபிரபஞ்சம் பொய்என்றெண்ணித்
தெளிந்துமனம்வெளியில்நின்று தேறும்பாரு
காச்சுதடாநரைதிரையும் கழிந்துபோச்சு
காந்தியுமேசோதி ஒளிசுழினைமீதில்
வாச்சுதடாசிவகுருவின் மகிமையாலே
மக்களேஅருநீரில் கிருபைதானே. 168

முப்புவியின்மார்க்கம் வழளைஎனினும் அது.

அருநீரின்கிருபையையார் அறியப்போறார்
அப்பனேதவமுனிவர் அறிந்தஉண்மை
சிருநீரும்பெருநீரும் தேவிநீரால்
ஜெயமுழு[illegible]ம்பெருகியதோர் நீர்தான்அப்பா
குருநீரும்துருசுநீர் குமரிநீரே
குண்டலியாம் சத்திசிவம்ஆனபேரு
பருநீரும்பிரபஞ்ச வாழ்க்கையின்பேர்
படர்ந்தநீர்சுரோதணிதநீர் பாருபாரே. 169

பார்புகழும்முப்பூவின் வகையைச்சொல்வேன்
பராபரியும்பார்வதியும் எனக்குச்சொன்னார்
சீர்புகழும்வெள்ளைக்கல் சுன்னம்என்றே
செப்புவேன்அரன்எடுத்து அமுதுகொண்டார்
நேர்புகழும்சித்தரெல்லாம் கிருபைபெற்ற
நிரந்தரமாய்நின்றதொரு துருசுக்கல்லு
பேர்புகழும்அக்கல்லு நறுக்கிக்கொண்டு
பேசாதேபலம்பத்து எடுத்துக்கொள்ளே. 170

கொள்ளுகிறஅமரிபடி எட்டிவாங்கிக்
கூடச்சேர்பூமியிட பூநீர்தானும்
விள்ளடாநான்குபலம் போட்டுநன்றாய்
விளாவியேகலக்கிவைத்துத் தெளிவைவாங்கி
செல்லடாகல்லை அங்கே அதிலேபோட்டுச்
செம்மையுடன்கொதிக்கவைத்துப் பதத்தில்வாங்கி
மெள்ளடாஅமரியினால் சுத்திசெய்து
மேன்மைஎன்றரவிதனிலே காயப்போடே. 171

காய்ந்துநன்றாய் அதைஎடுத்து முன்போல்செய்து
கட்டாகஇப்படியே பத்துமுறைசெய்வாய்
பாய்ந்தன்னசத்தெடுத்து ரவியில்போட்டு
பக்குவமாய்த்தூள்பண்ணிப் படிஎட்டுக்கு
ஆய்ந்தவர்ன்னநீர்அதுதான் பதினாறும்
அப்பனேஅதை அளந்துவிட்டுபூதம்
சேர்ந்தபலம்ஒன்றதுவும் கூடப்போட்டு
சேரநன்றாய்க்கலக்கிவைத்துத் தெளிவைவாங்கே. 172

தெளிவானஜலம்அதனை அடுப்பில்ஏற்றித்
தீஎரித்துக்குழம்பான பதத்தில்வாங்கி
வளியானபீங்கானில் ஊற்றிநல்ல
மக்கிளைகடுரவியில் வைக்கும்போது
கழிபானஉப்பங்கே படரும்பாரு
சுறண்டிஎடுமறுபடியும் அமரிபடிநான்கு
குழியானஉப்பதனில் கரைத்துக்கொண்டு
குணமானரவிதனிலே காயப்போடே. 173

போடப்பாஇப்படியே பத்துமுறைசெய்து
புகழ்பெற்றஉப்பதனை எடுத்துக்கொண்டு

நாடப்பாமுன்செய்கற் பொடியுஞ்சேர்த்து
நன்மைஉள்ளபசனீர் படிரெண்டுவாங்கி
கூடப்பாகலக்கிநன்றாய்த் தெளிவெடுத்துக்
குறுகிநின்றரவிதனிலே காயவைத்துச்
சாடப்பா இப்படியே மூன்றுமுறைசெய்தால்
தண்மைஉள்ளசுன்னம்ஆப் இருக்கும்பாரே. 174

சுன்னம்அதைக்கலவமதில் இட்டுக்கொண்டு
சுத்தம்உள்ளவெடியுப்பு அஞ்சாம்காச்சல்
எண்ணம்அதில்கண்டிடைக்கு எட்டில்ஒன்று
எடுத்துமேஅதில்பாதிச் சாரம்சேரு
வண்ணம்உள்ளசீனமது சாரம்இடைபோடு
மக்களேவீரமது பூரம்ரெண்டு
துண்ணிமையாச்சீனம்இடை கூடப்போட்டு
துப்புரவாய்பசனீர் விட்டுஆட்டே. 175

ஆட்டிநன்றாய்வழித்தெடுத்து வில்லைதட்டி
அப்பனேரவிதனிலே காயப்போடு
மேட்டிமையாய்த்திரியாதே வில்லைகாய்ந்தால்
வெண்மைஉள்ளஓட்டில்வைத்து ஓடுமூடி
தாட்டிகமாய்ச்சீலைமண் வலுவாய்ச்செய்து
தணல்எறன்முழுப்புடத்தில் வைத்தெடுத்துச்
சூட்டியதோர்மறுபடியும் கலவத்திட்டுச்
சுரோணிதநீர்விட்டாட்டிப் புடத்தில்போடே. 176

புடம்ஆறிவில்லைதனை எடுத்துக்கொண்டு
பேசாமல்கலவம்அதில் பொடியேசெய்து
மடமாடி ஆனகன்னிப் பழச்சார்விட்டு
மக்களேதுவளஅரைத் தெடுத்துக்கொண்டு
குடமாறிசிறுமடமாய் எடுத்துக்கொண்டு
கூடற்சேர்ஒருதிங்கள் ரவியில்தானும்
ஜெடமாறிமாற்றிநின்ற புஞ்சைவாங்கிச்
செம்மையுடன்முழுப்பூவில் கொஞ்சம்போடே. 177

போட்டவுடன்ரவிதனிலே வைக்கும்போது
புண்ணியனேபுஷ்டிஎல்லாம் கரைந்துபோகும்
நாட்டமுடன்தெளிவுதனில் வீரம்பூரம்
நன்றாகப்பொடிசெய்து அதிலேபோட்டு

தேட்டமுடன்கடுரவியில் வைத்துப்பாரு
தேவியென்றபூரணியாள் கிருபையாலே
வாட்டமுடன்மேல்படரும் உப்பைவாங்கி
மறுபடியும்பீங்கானில் உலரவையே. 178

உலரவைப்பாய்இப்படியே எடுத்துக்கொண்டு
உத்தமனேஎழுதிங்கள் உப்புங்கூட
மலரவைத்தமுப்புவுடன் சேர்த்துக்கொண்டு
மகத்தானகன்னியிடக் குடத்துநீரால்
தளரவைத்து அரைத்துநன்றாய் வில்லைதட்டித்
தண்மையுடன்ஓட்டினில்வைத் தோடுமூடிக்
கலரவைத்துமண்சீலை வலுவாய்ச்செய்து
வலுவாலிப்புடம்இடவே சுன்னம்ஆச்சே. 179

ஆச்சப்பாசுன்னம்அதை எடுத்துக்கொண்டு
அப்பனேவடுகனுக்கும் தேவிபூசை
பாச்சப்பாவஸ்துவுடன் சுத்திவைத்து
பலகாரம்பழவகைகள் பரமான்னங்கள்
காச்சப்பாபாலமுது நைவேத்தியம்செய்து
கனமானதூபமுடன் தீபம்காட்டி
வாச்சப்பாஅரதேசி பரதேசிக்கு
வளமாக அன்னம்இட்டு உபசாரம்செய்யே. 180

செய்துகொண்டுபெண்டுபிள்ளை மாய்கைதள்ளிச்
சின்மயமேபெரிதென்று மனதில்எண்ணிக்
கொய்துகொண்ட-பிரபஞ்ச மாயைஎல்லாம்
கூடழிக்கவேவந்த கூற்றுவன் தானென்று
நொய்துகொண்டஜடலம் அதுவலுக்கவேண்டி
நோக்கிமனம்குருபதமே கதிஎன்றெண்ணி
செய்துகொண்டமுப்பூவில் பணவிடைகால்கொண்டால்
ஜெடத்தில்உள்ளபிணிகள் அற்றுச் சித்தாய்போமே. 181

## கௌரிச்சுன்னம்.

சித்தானமகிமையைத்தான் என்னசொல்வேன்
ஜெடம்வலுக்கும்காந்தியுமோ அதிககாந்தி
முத்தானமுப்பூவின் மார்க்கம்எல்லாம்
முறையோடேசொல்லிவைத்தேன் சுத்தமாகப்

பத்தானமுப்பூவில் பணவிடைதானெடுத்து
பாச்சலாம்அமிர்தம்விட்டுக் குழைத்துங்கொண்டு
கொத்தானகெவுரிக்கிக் கவசம்கட்டிக்
குணமானரவிதனிமேல காயப்போடே. 182

காயவைத்துஅதன்மேலே நெருப்புமூலிக்
கட்டாகதான்வைத்துக் கவசம்செய்து
நேயம்வைத்துமண்சிலை வலுவாய்ச்செய்து
நேர்மைஉள்ளகுக்குடத்தில் வைத்தாய்ஆனால்
சாயம்வைத்துவெண்மையதாய் ஆகும்பாரு
தப்பாதுவெள்ளிதனில் பத்துக்கொன்று
நேயம்வைத்தகெவுரிதனை ஈந்தாய்ஆனால்
நேர்மைஉள்ளபத்துவய தாகும்பாரே. 183

பாரடாசாயம்உள்ள சரக்கெல்லாம்தான்
பண்ணுவாய்முன்போலே செய்துக்கொண்டு
நேரடாவெள்ளிசெம்பு பித்தளையும்ஈயம்
நேர்மைஉள்ளவகைகண்டு கொடுத்தாய்ஆனால்
தேரடாவயதங்கே மிகவும்காணும்
செய்துகொண்டுதபசுநிறை வேறவேண்டிக்
காரடாவயித்தியங்கள் செய்யும்போது
கண்மணியேமுப்பூவும் சேர்த்துப்பாரே. 184

## சிவஞானம்.

சேர்த்துப்பார்வயித்தியத்தில் உன்னைமிஞ்சி
ஜெகத்திலேவேறும்ஒரு மனிதர்உண்டோ
பார்த்துப்பார்ஆண்மைமிஞ்சிப் பேசவேண்டாம்
பரதேசிஎளியவன்போல் உலகத்துள்ளே
கார்த்துப்பார்எவர்மிஞ்சிப் பேசினாலும்
கருதாதேமனம்அடங்கிக் கனிந்துப்பேசு
கூற்றுப்பார்பிரபஞ்ச மாயைஎல்லாம்
கூடிவரப்போறதில்லை ஞானநிலைபெரிதே. 185

ஞானம்என்றஅறிவல்லோ விவேகம்புத்தி
நல்மனதாம்அறிவுடனே தண்மைவேண்டும்
ஈனம்இன்றிஈவதுவும் இரக்கம்வேண்டும்
எவ்வுயிரும்தன்உயிர்என் றெண்ணவேண்டும்

பானம்இன்றிப்பாகம்அதை அகற்றவேண்டும்
பரமன்என்றசிவன்செயல் என்றுணரவேண்டும்
மோனம்என்றரவிதன்னில் சார்ந்துநின்று
முத்திப்பெறபழக்கத்தால் பூண்டுபாரே. 186

பூண்டுபார்மனதங்கே தெளியாவிட்டால்
பொல்லாதமாயைவந்து கொல்லும்கொல்லும்
ஆண்டபிரான்சிவன்மகிமை என்றறிந்து
அப்பனேமதிதேயப் பழக்கம்பண்ணி
தாண்டவமாய்அங்குநின்று விளையாடும்கூத்தை
சந்ததமும்விலகாமல் பிசகாமல்தான்
தூண்டில்அல்லோதீபஒளி ஜோதிகாணும்
தூண்டாமல்தூண்டுவது சுழினைதானே. 187

சுழியானபூரணமே கதிஎன்றெண்ணிச்
சுற்றிவரும்வாசியைத்தான் நிறுத்தல்செய்து
வழியானரவிஅல்லோ சிவயோகம்ஆகும்
மக்களேசிவதீட்சை அதிகதீட்சை
பழியாகநின்றதடா மாயவாழ்க்கைப்
பற்றிஅல்லோதுடர்ந்ததடா பழியும்அங்கே
நெளியாமல்நின்றுடனே சித்தன்சித்தன்
நிஜமானசிவயோக வாழ்க்கைதேடே. 188

சிவயோகவாழ்க்கையிலே நிற்கும்போது
தீராதபிணிகள்வரும் ஆசைபூணும்
நவயோகம்ஆனதன்றே பொருளின்ஆசை
நாத்துகின்றபெண்ணாசை மண்ணின்ஆசை
தவயோகம்கெடுப்பதற்கு ஆசைமிஞ்சிச்
சண்டாளமாயையிலே சுழன்றுநொந்து
பவயோகம்ஆகும்இந்தக்கூடழிக்க அந்தப்
பற்றிநின்றஆசையெல்லாம் அடித்துப்போக்கே. 189

போக்கிஅல்லோஅறிவை அங்கேரவியில்சேர
புண்ணியனேமதிதேயப் பழக்கம்பண்ணி
வாக்கியமாய்-வங்-என்று மதியைவாங்கி
மகத்தானபூரணத்தில்- அங்-என்றான்றி
யோக்கியமுடன்-சிங்-என்று தவறிடாமல்
உத்தமனேரவியில்நின்று உறுதிஆக

பாக்கியமேஇதுஎன்று பாசம்வைத்துப்
பழகில்மதிதேய்ந்துரவி பிலக்கும்பாரே. 190

பிலமானரவியில்நின்று தேறவேண்டும்
பேதமில்லாப்பூரணத்தில் நிறுத்தவேண்டும்
தலமானதலம்அறிந்து சாரவேண்டும்
சங்கையுடன்மவுனம்அதைத் தாக்கவேண்டும்
குலமானசிவயோக வாழ்க்கைவிட்டால்
கூடவந்துமாயைஅது இழுத்துக்கொல்லும்
நலமானதேவிஅல்லோ ரவியில்நின்று
நாடாமல்பண்ணிவைக்கும் கூத்துதானே. 191

## திருநடனம்.

கூத்தென்றதிருநடனக் கூத்தைப்பாரு
கோடிரவிஒவ்வாது கண்ணேகூசும்
காத்தென்றசுழிமுனையில் சார்ந்துநின்றால்
சகலசவுபாக்கியமும் தானேஉண்டாம்
மாத்தென்றஇல்லறத்தில் இருந்தால்என்ன
மலைவறிக்காடுகரை போனால்என்ன
வாத்தென்றவாசிஅங்கே கைவசமேஆனால்
மக்களேசிவயோகம் வரிசைஆமே. 192

வரிசைஎன்றபூரணமே தெய்வம்தெய்வம்
மகத்தானபூரணமே கெதிஎன்றெண்ணி
உரிசையுடன்நின்றவனே சித்தன்சித்தன்
யோகிஅவன்பரதேசி ஞானிதேசி
கரிசைஎன்றஅண்டரண்ட பதம்கடந்து
கண்ணிவைக்குள்சுற்றிவரக் கமனம்ஓடி
நெரிகையுடன்காண்போர்க்கு இவனேபேயன்
நெறிதப்பிச்சொன்னவனே பேயன்ஆமே. 193

பேயன்என்றுசொல்லுவது ஆர்க்குமைந்தா
பெரிதானகர்மவலைச் சிக்கினோர்கள்
மாயம்என்றமாயையிலே அழுந்துகின்ற
மனம்உள்ளோன்பேயன்என்ற பேர்உள்ளோன் ஆம்
தேயம்இன்றசிவமதமே பூண்டதானால்
தெய்வம்என்றுபேராச்சு சிவரூபம்ஆச்சு

நாயம்என்றசொல்ஆச்சு நளினம்ஆச்சு
நாதாக்கள்என்றவனை நாடலாமே. 194

## சிவராஜயோகம்.

நாடலாம்மனம்அங்கே நாடும்போது
நலமாகஇன்னம்ஒரு பொருளைக்கேளாய்
தேடலாம்ஒரிதழின் தாமரையைத்தானும்
சிங்-எனவேவதமர்வாசற் குள்ளேசெல்ல
ஊடலாம்நாள்தோறும் பழக்கம்பண்ணி
உத்தமனேசுழிமுனையின் உள்ளேநின்றால்
வீடலாம்ரவிமதியும் பாசம்தள்ளும்
விளங்கும்அடாசோதிநின்ற இடத்தைப்பாரே. 195

சோதிநின்றஇடம்அல்லோ அமிர்தவாசல்
துலங்கவேபாசம்அதை அறுத்துத்தள்ளும்
வீதிநின்றபாசம்அது அகலும்போது
வீழுமடா அமிர்தரசம் மேவிக்கொள்ள
ஆதிஎன்றதேகம்அது இறுகிப்போகும்
அப்பனேதீபஒளி போலேமின்னும்
வாதிஎன்றபேர்ஆச்சு மகிமைஆச்சு
மகத்தானபூரணத்தின் மகிமைதானே. 196

மகிமைஎன்றஅண்டம்எல்லாம் சுற்றும்போது
மகத்தானஉச்சிமலை வரையில்ஏறு
மகிமைஎன்ற உச்சிமலை கண்டோன்சித்தன்
மகத்தானசித்தரில் கொங்கணவன்தானும்
மகிமைஎன்றபேர்உடையன் அவனைப்போலும்
மனதுருகிநின்றவர்கள் யாரும்இல்லை
மகிமைஎன்றசித்தன் அவன்யோகிதேசி
மனக்குறைகள்இல்லாத மவுனிஆமே. 197

மவுனிஎன்றசித்தர்மெச்சும் வழிஉள்ளானை
மகிழ்ந்துகொண்டார்முனிவர் சித்தர்மகிழ்ச்சிஆக
கெவுனிஅவன்சித்தரிலே அவனைப்போலும்
கேள்விளங்கும்கேட்டதில்லை நிரமோமெத்த
பவனிஎன்றஉலகம்எல்லாம் நிமைக்கும்முன்னே
பகுந்தோடிஅவன்வருவான் பகர்ந்தபிள்ளை

பவனிதனில்வளர்ப்போர்கள் மிகப்பெற்றோர்கள்
பார்க்கஎன்றால்உலகதனில் கண்டிலேனே. 198

கண்டிலேன்சித்தர்களில் முனிவர்தன்னில்
கயிலாசவர்க்கம்அதில் அநந்தம்கோடி
விண்டிலேன்அண்டம்வரைச் சுற்றிப்பார்த்து
மெய்ஞ்ஞானபோதம்அதை விரும்பினோர்கள்
மண்டிதேகண்டத்தில்லை எனக்குஈசன்
மதிகுளிரச்சொல்லிவைத்த வார்த்தைஅப்பா
பண்டுபோய்தவமசிமை பெற்றபேர்கள்
பரிவாகத்தான் இருந்து வாழ்வார்பாரே. 199

வாழுவதுபூரணத்தை நம்பினோர்கள்
மகத்தானரவியைவிடா திருந்தபேர்கள்
மீளுவதுகாயகற்பம் கொண்டபேர்கள்
மிஞ்சிநின்றபிரமநிலை கண்டபேர்கள்
மாளுவதுஒருபோதும் இல்லைஇல்லை
மகத்தானதேசிஎன்ற குதிரைஏறி
ஆளுவதுதிண்ணம்அது சிவனும்சொன்னார்
அப்பனேகற்பம்அதை அறிவிப்பேனே. 200

கற்பம்என்றால்அற்பம்அல்ல மதனப்பூடு
கண்டுகொண்டபரதேசி வாசிதேசி
உற்பனமாய்ச்சொல்லிவைத்தேன் உலகம்தன்னில்
உத்தமர்க்குச்சாகாமல் இருக்கஎன்று
விற்பனவிவேகம்உள்ளோர் தம்மைக்கண்டு
மேதினியில்விள்ளாமல் அடக்கம்செய்து
கற்பனைகள்செய்யாமல் பூடுவாங்கித்
தண்மைஉள்ளமதிதனிலே சார்வாய்ச்செய்யே. 201

## அகாரஉகாரமகாரகற்பம்.

சார்வானஅகாரம்அதைப் பூசைபண்ணு
சங்கையுடன்ஆண்டொன்று சென்றபின்பு
ஓர்வானஉகாரம்அதை ஆண்டுகொண்டு
உத்தமனேஉகாரம்அதை ஆண்டுகொள்ளு
சேர்வானமூன்றையுமே ஒன்றாய்சேர்த்துச்
செவ்வையுடன்சுத்திபண்ணித் தீட்சைபத்துத்

நிர்வாணதீட்சைபத்து முடிந்ததாலுல்
செலுத்தடாஆண்டொன்று நிரமாய்த்தானே. 202

நிரமாகஆண்டொன்று நிர்ந்ததாலுல்
சேரடாகடைசரக்கு வீரம்பூரம்
உரமாகக்கெந்தியுடன் லிங்கம்சேரு
உத்தமனேஅரிதாரம் ஒரிடைபேகொண்டு
வரமானமுன்கருவில் சமனாய்க்கொண்டு
மக்களேவெடியுப்பு சீனம்சாரம்
பரமானமுன்சேர்த்த இடையாய்க்கூட்டு
பாங்காகப்பாலைநீர் விட்டுஆட்டே. 203

ஆட்டியேவழித்துருட்டி வட்டுபண்ணி
அப்பனேரவிதனிலே காயப்போட்டு
இட்டியே ஓட்டில்வைத்து ஓடுமூடிச்
செம்மையுடன்மண்சீலை எழும்செய்து
வாட்டியேமுழுப்புடமாய் வைத்தெடுத்து
மக்களேமறுபடியும் கலவத்திட்டு
மூட்டியேஅமர்தமது விட்டேஆட்டி
முன்போலப்புடத்தினில்வைத் தெடுத்திடாயே. 204

எடுத்துமேகலவமதில் பொடித்துக்கொண்டு
என்மகனேசிவந்தகன்னிப் பாலைவிட்டு
அடுத்துமேஅரைத்துநன்றாய்ப் பில்லைதட்டி
அப்பனேமுன்போலப் புடத்தில்போடு
கடுத்துமேபுடம்ஆறிஎடுத்துமைந்தா
கலவம்அதில்முன்போலும் பொடித்துக்கொண்டு
கொடுத்துமேகுடத்துநீர் விட்டேஆட்டித்
துவளரைத்துவில்லைதட்டிக் காயப்போடே. 205

போடெடுத்துப்புடம்தனிலே வைத்துப்பாரு
புண்ணியனேபூப்போலே மலர்ந்துநிற்கும்
ஆடெடுத்தகள்ளனைப்போல் தேகபீட
அகலுமடாவாதபித்தம் அறிந்துக்கொள்ளு
தோடெடுத்துப்பூண்டசத்தி எனக்குச்சொன்னாள்
சொல்லிவைத்தேன் உலகதனில் பிழைக்கவேண்டி
கூடெடுத்துக்கற்பமதைப் பின்னேகொள்ளு
குருபூசைசிவபூசை குணமாய்ச்செய்யே. 206

செய்துமேசத்தியிடப் பூசைசெய்து
திரமானசித்தர்பதம் பணிந்துக்கொண்டு
எய்துமேமாதாவைப் பணிந்துக்கொண்டு
என்மகனேஅரதேசிக் கன்னம்ஈந்து
மொய்துமேரவியைநம்பிச் சுழினைநின்று
மோட்சகாரணசூட்சம் அதுதானென்று
நொய்துமேஎனத்தாயைப் போற்றிசெய்து
நோக்கடாபணிவிடைதான் கொண்டுதேறே. 207

தேறுவதுஆண்டொன்று சென்றதானால்
தீராதவல்பிணியும் தீர்ந்தேபோகும்
ஆறுவதுபெண்ணரவம் கடித்ததானால்
அழிந்துவிடும்உன்ஜடலம் நித்தியம்சொல்வேன்
மீறுவதுஅவிழ்தமது நிலைத்ததானால்
மிதமாகஇருக்காதே கனியின்பாகம்
சேருகதுவகையாகச் சேர்த்துக்கொண்டு
தின்னுவார்காயாதி கற்பம்ஆச்சே. 208

ஆச்சப்பாஅவமிருத்து எங்கேபோச்சு
அட்டனேஎமனென்ற பிணிதானெங்கே
நீச்சப்பாநிலையாத வாசிமட்டும்
நிலையாதஅமிர்தரசம் பொங்கிவீழும்
வாச்சப்பாவாலைஅவள் குடியும்ஆச்சு
மகத்தானசித்தனென்ற பேரும்ஆச்சு
போச்சப்பாஉலகம்என்ற வாழ்க்கைபோச்சு
புத்தியால்தாய்பதத்தைப் போற்றிசெய்யே. 209

## பொன்முகட்டை.

போற்றுவதுபொன்முகட்டை மகிமைகேளாய்
புண்ணியனேமானிடர்க்காய் மனம்இரங்கி
நாற்றிசையும்கீர்த்திபெற்ற மதனப்பூடை
நாடதனில்தேடியே நன்றாய்ப்பார்த்துக்
கார்த்துமேநீஇருந்து வருஷகாலம்
கழித்துமெள்ள உறவாடிப் பூவைவாங்கி
தேற்றியேபூவதனைப் பதனம்பண்ணித்
தெளியவைத்துச்சீசாவில் அடக்கம்செய்யே. 210

செய்துகொண்டு அம்மரத்தின் கனியைவாங்கித்
திடமான அகாரம்அதில் பூநீர்போட்டு
நொய்துகொண்டுபோவதற்கு வீரம்பூரம்
நோக்கடா அதின்உள்ளே நுணுக்கிப்போட்டு
பைதுகொண்டகனி அதனைப் பத்துமுறைச்சுத்தி
பாங்காகச்செய்துகொண்டு பதனம்பண்ணி
நைதுகொண்டரவிமுகத்தில் நவநாளும்தான்
நன்றாகக்காய்ந்தபதம் கண்டுதேறே. 211

தேறுவதும்அரிதுரிமை யாகநின்று
திடமாகக்காய்ந்தபதம் எடுத்துக்கொண்டு
ஏறுவதுமதனாதி ஜலத்தைவிட்டு
என்மகனேகிண்டிப்பார் உப்பாய்நிற்கும்
கூறுவதுஉப்புடனே மும்மூர்த்திதன்னைக்
குழையவைத்து அமரிதனில் ரவியும்சேர்த்து
மீறுவதுபுதுக்குடத்தில் தண்ணீர்விட்டு
மீறாமல்நவநாள்தான் ரவியில்வையே. 212

வைத்துதான்வீரமுடன் பூரம்சேரு
மைந்தனேகெவுரியுடன் துரிசுவெள்ளை
மெய்த்ததொருதங்கமது சரியாய்க்கொண்டு
மீறாமல்நிஷ்டைக்கு அண்டப்பூநீர்
கொய்த்துமேகுடத்துநீர் விட்டேஆட்டிக்
குழையரைத்துவில்லைபண்ணி ரவியில்வைத்து
நைத்துமேமுழப்புடத்தில் வைத்தெடுத்து
நன்றாகமுன்குருவில் நாலில்ஒன்றுசேரே. 213

சேர்த்தரைத்துக்குடத்துநீர் விட்டேஆட்டிக்
செம்மையுடன்வழித்தெடுத்து வட்டுபண்ணி
நேத்தியுடன்காய்ந்தபின்பு முழப்புடத்தில்வைத்து
நெறிதப்பிச்செய்யாதே குருவைமறவாதே
பார்த்திபனேநேமநிஷ்டை தன்னைமறவாதே
பரிவாகத்தான்அறிந்து ஒருவர்அறியாமல்
காத்திருந்துகுருமுடிக்கும் காலம்பார்த்துக்
கருணைவளர்பூரணத்தில் கருவைக்கிண்டே. 214

## மதியண்டக்கரு.

கிண்டிவைத்துக்குருபூசை வைத்துப்போற்றிக்
கிணேசனிடப்பூசைசெய்து வடுகன்பூசை
அண்டம்எல்லாம்படைத்து நின்றசத்திபூசை
அன்பாகச்செய்துகொண்டு அருளைப்போற்று
கண்டதொருசாஸ்திரத்தின் பாடல்கண்டு
கருவையங்கேஅணுவளவு நீட்டிப்பாரு
தொண்டுபண்ணும்வாதமோடு வயித்தியமெல்லாம்
தொலையாதநோய்களெல்லாம் துலைந்துபோமே. 215

போமேதான்உலகுதனில் பிணியும்உண்டோ
பொன்விளையும்கருஅதுதான் புனிதகற்பம்
வேமேதான்கமனரசக் குளிகைசெய்யும்
வேணபடிவாசியது நிலையில்நிற்கும்
தேமேதான்தேகமது இறுகிப்போகும்
சிவந்துமேகாணுமடா நரைதிரைகள்மாறும்
கோமேதான்மதியினிட அண்டம்வாங்கிக்
குழையவைக்கப்பூரமது கூடச்சேரே. 216

சேராமாதாந்த நீரும்சேரு
சிவந்தகன்னித்திங்கள் அதில்எழும்சேரு
ஆராயறிவார்கள் மும்மூர்த்தியான
அதிதமென்றபொருளதனை அழைத்துப்பாரு
ஏராபூரணத்தைக் கூடச்சேரு
என்மகனேஎரண்டத் தயிலத்தாட்டிக்
காராசத்தியைத்தான் பூசைபண்ணிக்
கருவானதொழில்களெல்லாம் தொட்டுஆட்டே. 217

## முப்பு சேர்மானம்.

ஆடுவாய்கரிசனத்தின் கருவிதாகும்
அப்பனேமறைப்பிணிடக் கருவிதாகும்
தேடுவாய்வசிகரத்தின் கருவிதாகும்
ஜெகஜ்ஜாலமாடுகிற கருவிதாகும்
கூடுவாயஷ்டகர்மக் கருவிதாகும்
குவலயத்தில்பசாசுமுதல் வசியமாகும்
நாடுவாய்யெத்தொழிலும் இக்கருவைவிட்டால்
நன்மைஇல்லைபலியாது கருவுநன்றே. 218

நன்றென்றமுப்பதுநாள் முடிக்குமார்க்கம்
நான்வெளியாய்ப்புலம்பிவைத்தேன் மனிதர்க்காகச்
சென்றென்றபேரண்டம் கொண்டுவந்து
சிறிசாகஇதைநறுக்கி எடுத்துக்கொண்டு
மன்றென்றஊசிநீர் எனும்நீர்தன்னில்
மக்களேஅண்டமென்ற பூநீர்போட்டு
குன்றென்றபூமியிடப் பூநீர்தானும்
கொண்டுவந்துஅதில்கலக்கித் தெளிவைவாங்கே. 219

வாங்கியேயண்டத்தை அதின்மேல்போட்டு
மக்களேகொதிக்கவைத் தெடுத்துக்கொண்டு
தூங்கியேதிரியாதே ஊசிநீரில்
துப்பறவேகழுகிஅதைக் காயப்போட்டு
பாங்கியே அண்டம்வதை எடுத்துவைத்துப்
பாங்காகஅண்டம்என்ற பூநீர்த்தேடி
ஏங்கியேகொண்டுவந்து ஊசிநீரில்
எட்டில்ஒருபாண்டத்தில் கலக்கிவையே. 220

வையகத்திற்மூன்றுநாள் சென்றபின்பு
மக்களேதான்இதனில் தெளிவைவாங்கி
நைத்திடுவாய்அடுப்பேற்றித் தீயைமூட்டி
நன்றாகக்குழம்புபோல் பருவம்பார்த்து
மெய்த்திடுவாய்பீங்கானில் இருத்துக்கொண்டு
மேன்மைஉள்ளரவிதனிலே வைத்துப்பாரு
பொய்த்திடாதுப்பாக உறைந்திருக்கும்
புண்ணியனே இப்படியே பத்துமுறைசெய்யே. 221

செய்தவுப்பையெடுத்துமே பதனம்பண்ணு
செவ்வையுள்ளசிறுபசளை நீருவாங்கிக்
கொய்தமுடன்பூமியிட பூநீர்தன்னைக்
கொண்டுவந்துயதில்கலக்கித் தெளியவைத்து
வைதமுடன்தெளிவையங்கே காயவைத்து
மக்களேவுப்பெடுத்து மூன்றும்ஒன்றாய்
நெய்தமுடன்சரிவிடையாய் எடுத்துக்கொண்டு
நேர்மையுள்ளகலவத்தில் இட்டிடாயே. 222

இட்டுமேபானையிட நீரைவார்த்து
என்மகனேவழவழப்பு காணும்மட்டும்

தொட்டுமேயரைத்துநன்றாய் வழித்துருட்டி
துவள் அறவேகாய்ந்தபதம் தன்னில்தானும்
போட்டுமேகெஜப்புடத்தில் நீறிப்போகும்
புண்ணியனேயதைஎடுத்து கல்வத்திட்டு
நட்டுமேசீனமொடு சாரம்சேரு
நன்மையுடன் வெடியுப்புஇவடக்கிடைசேர்ப்பாயே. 223

சேரேசீசிறுபசளைச் சாறுவிட்டு
செவ்வையாய்த்தான் அரைத்துவட்டுபண்ணி
பாரேநீரவிதனிலே காயவைத்துப்
பண்பானஓட்டில்வைத்து ஓடுமூடி
நேரேநீசீலைமண்ணும் நன்றாய்ச்செய்து
நேமநிஷ்டைமறவாமல் புடத்தில்போடு
கூரேயதையெடுத்து வைத்துக்கொண்டு
குணமானவீரமுடன் பூரம்சேரே. 224

சேரப்பாவில்லைகண்ட இடைக்குத்தானும்
ஜெயமானரவிபீஜம் நாலில்ஒன்று
கூரப்பாகுடத்துநீர் விட்டேஆட்டிக்
கூர்மையுடன்அரைத்துருட்டி வட்டுபண்ணி
நேரப்பாபுடம்அதிலே வைத்துப்போடு
நிஜம்உள்ளமாதாவை வணங்கிநில்லு
ஆரப்பாஅறிவார்கள் முப்பூதன்னை
அருமையுள்ளசித்தனவன் அறிவான்பாரே. 225

## இரவிமெழுகு.

அறிவானமுப்பூவைப் பதனம்பண்ணி
அப்பனேஆண்டொன்றின் அண்டம்வாங்கிக்
குறியானஅண்டத்தின் இடையேபூரம்
கூட்டிவைக்கரவிதனிலே மெழுகும்ஆகும்
சரியானநவநாள்தான் வைத்தெடுப்பாய்
தங்கம்என்றசிமிழாதல் தந்தமாதல்
மறியானசிமிழ்தனிலே அடக்கம்பண்ணி
மைந்தனேதேவிமுன்பு வைத்துப்போற்றே. 226

போற்றுவாய்குருபூசை மண்டலந்தான்அப்பா
பூண்டுசென்றபோதல்லோ ருருவதாச்சு

மாற்றுவாய்மூப்புவைநீ பதனம்பண்ணு
மக்களேமெழுகுவெகு பதனம்சொன்னேன்
காற்றுமேல்மிதந்தபுத்தி யாகநின்றால்
காணுமல்மறைப்புமையைப் போட்டுக்கொண்டு
சேர்த்துமேசித்தர்வந்து சோரஞ்செய்து
திரவியம்போல்இக்குருவைத் திருடுவாரே. 227

திருடுவார்உனக்கும் உபகாரஞ்செய்வார்
செம்மையுடன்கேட்டதெல்லாம் ஈவார்பாரு
வருகுவார்உனக்குநல்ல வாக்களிப்பார்
மக்களேகற்பம்உண்ண வழியும்சொல்வார்
பருகுவார்நல்லபிள்ளை யாகக்கூடப்
பதிலாக அழைத்துப்போய்ப் பதியில்வைப்பார்
இருகுவார்அவர்கள்பதம் போற்றிசெய்து
கேட்டதெல்லாம்தான்கொடுத்து தொண்டுபண்ணே. 228

மதிமெழுகு.

தொண்டுபண்ணு அவர்கள்மனம்நோகொண்ணாது
சுந்திரனேஎன்னுடைய மகனேஐயா
வண்டுபோல்பறுஜெந்மம் ஆவதற்கு
வகைகேளாய்பச்சைகற் பூரம்ஒன்று
கொண்டுபோம்கோரோஜனை குங்குமப்பூ
கோதைகொள்ளும்ஜாதிக்காய் ஜாதிபத்ரி
விண்டுபோம்கிராம்புடனே ஏலம்கூட்டி
விதமானமாவிலிங்கம் உரமும்கூட்டே. 229

கூட்டியேகஸ்தூரி மஞ்சள்தாரம்
தோகையடாகன்னிஒன்று அஞ்சாம்திங்கள்
நாட்டியேகன்னியிடச் சுரோணிதமாம்உப்பு
நலமானகொடிநஞ்சு மாவும்சேர்த்து
வாட்டியேஆண்டொன்றில் மாண்டஅண்டம்
மக்களே அண்டம்என்ற பூநீர்தானும்
மாட்டியேஅமரியுப்பு பூமிநாதம்
மைந்தனேஒரிடையாய் எடுத்துக்கொள்ளே. 230

கொள்ளடாஅயப்பொடியும் காந்தம்லிங்கம்
கோதையிடநாதம்அதில் கெந்திசேரு

வெள்ளடா அரிதாரம் வீரம்பூரம்
விதமானமனோசிலையும் வெடியுப்புசாரம்
தள்ளடாசீனமொடு சரக்கெல்லாம்தான்
தான் அரைப்பாய்பசளைநீர் விட்டுநன்றாய்
துள்ளடா அரைத்துருட்டி வட்டுபண்ணித்
துப்பரவாய் ஒட்டில்வைத்து ஓடுமூடே. 131

மூடியேசீலைமண்தான் வலுவாய்ச்செய்து
முழுப்புடத்தில்வைத்துமுன்பாம் சரக்கில் சேரு
வாடியேதிரியாதே மனம்சோம்பாதே
மக்களேசிவதேவம்பின் தயிலம்விட்டு
நாடியே அரைநன்றாய் நான்குஜாமம்
நயம்பெறவே அரைத்தபின்பு சொல்லக்கேளாய்
சூடியேசுரோணிதநீர் விட்டுஆட்டித்
துவள அரைநால்ஜாமம் சூடத்துநீரே. 232

நீரானகுடைத்துநீர் விட்டுஆட்டி
நீமகனேமுப்பூவும் நூற்றுக்கொன்று
கூரான அண்டமென்ற மெழுகில்தானும்
கொடுத்துவிடு ஆயிரத்துக் கொன்றேஅப்பா
வாரானஆண்டொன்றில் மாண்டபிண்டம்
வகையாகத்தயிலம்அது செய்துக்கொண்டு
சீரானஇத்தயிலம் விட்டுஆட்டித்
தேவிஎன்றமனோமணியைப் பூசைசெய்யே. 233

பூசையிலேவைத்தெடுத்து குருவைப்போற்றி
புண்ணியனேஅரதேசி பரதேசிக்கன்னம்
பேசையிலேதான்கொடுத்து சிவனைப்போற்றிப்
பெருமையுள்ள மெழுகதனில்குன்றிஉண்ணு
ஆசையிலேவிழுகாதே மண்டலம்தான்
அப்பனேயறியாது ஆபசென்றும்
வேசையிலேஆசைகொண்ட பசல்களுக்கு
விள்ளாதேதோஷம்வரும் வேதம்பாரே. 234

பாரடா இரண்டிரண்டின் அண்டமென்றால்
பழுதில்லைமூன்றுமொரு அஞ்சுக்குள்ளே
சோடாகற்பமது ஆகும்பாரு
இடமில்லைப்பதினாறு ஆண்டுமட்டும்

கூரடாயில்விதமாய்ற் செய்துஉண்ணக்
குறையாதஆண்டுகள்தான் குறைந்துபோகும்
மாரடாமற்ற அண்டம் மைப்போக்காகும்
மாரணைமாம்கற்பத்திற் காகாதன்றே. 235

ஆகாதுசந்திரனும் சூரியனுமாகும்
அப்பனேசந்திரன்தான் ஐஞ்ஞூறுண்டு
போகாதுசூரியனே ஆயிரம்தான்உண்டு
போகமுனிப்பிள்ளைகளும் உண்டகற்பம்
வேகாதுமற்றுமுள்ள ரிஷிகள்சித்தர்
விரும்பியதோர்கற்பமிது சத்தியமாய்ச்சொன்னேன்
யோகாதிசெய்பவர்கட் கிந்தகற்பம்
உத்தமனேகிட்டுமற்றோர்க் கில்லைத்தானே. 236

இல்லையடாபரிபாஷை இதுபோல்சொல்லும்
என்மகனேஇந்நூற்கள் இல்லாவிட்டால்
சள்ளையடாசாஸ்திரங்கள் பார்த்துப்பார்த்துத்
தயங்குவதேயல்லாது சரிவராது
கொள்ளையடாஇந்தநூல் கிடைத்தபேர்க்குக்
குறிதெரியும்நெறிதெரியும் கூர்மைதோன்றும்
பிள்ளைகளேயுங்கள்புத்தி மயங்கிடாதீர்
பெருநூலைப்பார்த்தலைந்தால் பிசகுதானே. 237

சித்துமகிமை.

பிசகாதுநந்திநான் முந்நூறுநப்
பேசிவிட்டேன்வெளிதோன்றப் பேசாதெல்லாம்
தசகாதுதயிர்கடைந்து நெய்யெடுத்தத்
தன்மையைப்போல் காணுமடாகருக்களெல்லாம்
பிசகாதுமனக்குரங்கின் கொட்டில்சிக்கிப்
பிரபஞ்சம்பொய்யெனத்தான் பிரமிக்காது
வசமாகநான்சொன்ன படியேசெய்து
மக்களேகற்பம்உண்டு சித்தில்சேரே. 238

சேரடாநந்திபிள்ளை என்றுசொன்னால்
ஜெயம்பெற்றசித்தர்களும் உபசரிப்பார்
வாரடாஅருகிருத்தி வார்த்தையாடி
மக்களைஏறுகிற மார்க்கம்சொல்லி

கூடாவழிதுறையும் நன்றாய்ச்சொல்லிக்
கூடவேசேர்ந்துறவு கொண்டு பின்னும்
ஏறடாதுறைஅறிந்து ஏறும்போது
என்மகனேநாம்உனக்கு இதைச்சொல்வோமே. 239

சொல்லுவோம்சித்தரிட மகிமைஎல்லாம்
சுட்டிவைப்போம்சிவகிருபை தோன்றிப்போகும்
வெல்லுவோம்சித்தர்களும் அழைத்துக்கொள்வார்
வெகுகோடிகாலமிட்டும் இருந்துவாழ்வார்
கல்லுவோம்உன்தேகம் அழிவதில்லைக்
காணலாமதிசயங்கள் தோன்றுமட்டும்
மல்லுவோம்என்பிள்ளை ஆனால்மக்காள்
மகத்தானசித்தரிட மகிமைதானே. 240

மகிமைகொண்டசித்தரிலே சேர்ந்துக்கொண்டு
வாழலாம்கோடியுகம் வாழ்ந்திருந்து
நகிமைகொண்டபரத்தினிடக் கிருபைகூர்ந்து
நழுவாமல்மலைதோறும் வாசமாகி
சகிமைகொண்டசாம்பவியாள் வார்த்தைசொல்லத்
தான்கேட்டுத்தேவரிஷி தானுமாகி
முகிமைகொண்டதேவசபை வாசமாகி
முத்திபெற்றுப்பரதேசி ஆவாய்பாரே. 241

பரதேசிஎன்றசொல்லும் அப்போதாச்சு
பார்மகனேகயிலாசத் திரேகம்ஆச்சு
நிரதேசிஆனபதி நிலைத்துப்போச்சு
நிராமயமாய்நின்றபொருள் நீதான்ஆச்சு
குரதேசிகூற்றன்என்ற மாயைபோச்சுக்
கூட்டில்விளையாடும்ஐந்தும் குணமாய்ப்போச்சு
இரதேசிஆச்சு இகபரம்தானாச்சு
இருந்துவிளையாடுகின்ற சித்தனாச்சே. 242

சித்தன்என்றபேர்வறவே வெகுநாள்செல்லும்
ஜெடம்இருந்துகற்பம்இது தெளிந்துபாரு
முத்தன்என்றநாயாதி கற்பம்கொள்ள
முடியாமல்வெகுபேர்கள் இறந்துபோனார்
கத்தன்என்றநிதிவேண்டும் கருத்தும்வேண்டும்
கருவைஅங்கேகாணுதற்குக் கருணைவேண்டும்

புத்தன்என்றமாய்கைதனில் சிக்கினோர்கள்
புதுப்பானைஈப்போலாம் புவியில்தானே. 243

புவிதனிலேஉள்ளவர்கள் கோடிக்கொன்று
புண்ணியமேசெய்தவர்க்குக் கருவுதோன்றும்
தவிதனிலேமகிமைபெற்ற சித்தர்பாதம்
தான்கண்டுதொழுதுமிக வணக்கம்செய்து
கவிதனிலேஉள்ளதொரு பொருளும்சொல்லிக்
கைபாகம்செய்பாகம் கருத்தும்சொல்லிப்
பவிதனிலேபிரபஞ்ச மாயைநீங்கப்
பரத்தினிடநிலைசொல்லிப் பாவிப்பாரே. 244

பாவிப்பார்என்மகனே என்றுசொல்லிப்
பதஞ்சலியாள்மகிழ்ந்துபெற்ற மகனேஎன்று
தாவிப்பார்அருகிருக்கி முத்தம்இட்டுத்
தமிழ்உரைத்தகவிதனக்குப் பயனும்சொல்லி
கோவிப்பார்புத்திவர ஞானம்சொல்லிக்
குலாவிவரக்கமனத்தின் குறியும்சொல்லி
ஆவிப்பார் அநுக்கிரகப் பேரும்இட்டு
அப்போதுகாஷாயம் அருள்செய்வாரே. 245

காஷாயம்கொடுத்துநந்தி பிள்ளைஎன்று
கண்மணியேஎன்மகனே வாஎன்றேதான்
ஆயாசம்தீருதற்குக் கனியும்ஈந்து
அழைத்துப்போய்ஐயர்பதம் பணியச்சொல்லி
வாயாறப்பேரும்இட்டு வண்மைசொல்லி
வசனித்தேசிற்சபையில் வருங்சொல்லி
தாயானமனோன்மணியாள் முத்தம்இட்டுத்
தன்வசமாம் இனம்தனிலே தான்சேர்ப்பாரே. 246

தான்சேர்ந்தபோதல்லோ சித்தன்ஆச்சு
சங்கைகெட்டமாட்டுவோ சித்தன்ஆவான்
வான்சேர்ந்தபோதல்லோ பிறவிஅற்று
மாய்கைஎன்றபிரபஞ்ச வாழ்க்கைஅற்று
கோன்சேர்ந்தபோதல்லோ சித்தர்கூட்டம்
கூடிவிளையாடுதற்கும் போதம்கொண்டு
வான்சேர்ந்தபோதல்லோ மாய்கைபோச்சு
மக்களேசித்தன்என்று வசனிப்பாரே. 247

வசனிப்பார்புவிதனிலே உள்ளபேர்கள்
வந்தடுத்துஉனைவணங்கித் தெண்டன்செய்து
குசனிப்பார்அவர்கள்உற வாகாதப்பா
கோதையர்கள்ஆசையிலே மயங்குவோர்கள்
நிசனிப்பார்உனக்குவரு மானமென்ன
நீக்கியேபுறம்பென்று நிலையில்நில்லு
வசனிப்பார்கோடிசித்தர் மாண்டாரென்று
வஞ்சகங்கள்பிரபஞ்சம் சொல்லும்பாரே. 248

## சீஷனைச்சேர்க்கும் இயல்பு.

சொல்லுவதுகேட்டிலையோ மகனேஎன்ன
சூதுகபடானகலி யுகத்தின்வாழ்க்கை
வெல்லுவதுகோடியிலே ஒருவன்உண்டு
வேதாந்தகல்விகடல் மிகுந்தசித்தன்
கொல்லுவதுபாசம்விடும் சுற்றம்பெண்டிர்
குழந்தைசுற்றம்பொன்னாசை மண்ணின்ஆசை
தள்ளுவதுகோடியிலே ஒருவன்உண்டு
தண்மையுள்ளபிள்ளை அதென்றழைத்துச்சேரே. 249

சேர்த்ததனால்உனக்குஒரு பிள்ளைஆச்சு
திரப்படுத்தும்சித்தினிட மகிமைசொல்லி
நேத்திரம்போல்தான்நினைத்து கரைஏறுதற்கு
நிருவிகற்பம்ஆம்பொருளை நெஞ்சில்வைத்து
சாத்திரத்தின்வினயம்எல்லாம் சரியாய்ச்சொல்லி
சஞ்சாரசமாதியிட வழியும்சொல்லி
பாத்திரம்என்றெண்ணி அல்லோமவுனதீட்சைப்
பதியாகும்இருதயத்தில் பதியச்சொல்லே. 250

பதியமனம்இல்லாவிட்டால் அகலத்தள்ளு
பஞ்சமாபாவிஎன்று அடித்துப்போடு
கெதிஉனக்குஇல்லைஎன்று விதியைச்சாடு
கேட்டதற்குஏதெனவே கிருபைசெய்து
சதிஉனக்குமதிஇல்லாப் பிள்ளைஎன்று
தள்ளிவிட்டுநீஒதுங்கித் தானேசெல்லு
மதிஅவற்குவருமானால் அழைத்துக்கொள்ளு
மக்களேபிரபஞ்ச மாயைபொய்யே. 251

பொய்யென்று எண்ணாமல் பூதலத்தில்
போராட்டத்தாறில்உடலம் நிலைப்பதில்லை
மெய்யென்றுவாசியைத்தான் விரும்பிநின்று
மெய்ஞ்ஞானபோதம்உற்று கற்பங்கொள்ளு
சையென்றுசாம்பவியாள் கிருபைதன்னைச்
சாராமல்உடலம்அது தளர்ந்துப்போனால்
வையென்றமறுபிறப்பில் சித்தில்சேர்ந்து
வாழவதுதான்பொய்யென்று அரன்சொன்னாரே. 252

வேறு.

அரன்சொன்னசொல்லை அன்பாகஎண்ணிப்
பரம்சேர்ந்தசித்தர் பலவிதம்சொன்னார்
சரம்சேர்ந்தஇக்கரு சத்தியமாய்ச்சொன்னேன்
உரம்சேர்ந்தகருவென் றொளித்தார்கள்சித்தர். 253

ஒளித்தகருவை ஒளியாமல்நானே
அளித்தபொருளை அறிவுறச்சொன்னேன்
பழித்தரிஷிகள் பாடியநூல்கள்
கழித்தமறைப்பைக் கண்டிடுவாயே. 254

கண்டிடச்சொன்ன கருமறைப்பெல்லாம்
விண்டிடயானும் வெளிதோன்றச்சொன்னேன்
பண்டிடமுனிவர் பலவிதம்ஆகக்
கொண்டிடச்சொன்ன குறிஅறிவாயே. 255

## நூலுக்குச்சாபம்.

குறியும் அறியக் குணக்கற்றநூலை
நெறிதவறாமல் நேசம் அதாகவே
தெறியத்தனியே ஜெகத்தில்ஒருவர்
அறியக்கூடாதே அரன்சொன்னசாபமே. 256

சாபமேபெரிது சத்தியம்சொன்னேன்
கோபமேசெய்வார் கொடிமுடிவேகும்
பாபமேவந்து பழிகொலைசுற்றும்
நாமமும்அற்று நரகில்விழுவாரே. 257

விழுவாரேநோயில் விலக்கஒண்ணாது
அழுவாரேஅவரொடு சுற்றமும்அழிந்திடும்

மழுதறப்பொருளைப் பதிவாய்அடக்கிவை
மழுவறச்சத்தியம் ஆகநினைத்திடே. 258

நினைத்திட்டபேர்க்கு நிருவாணிகிருபை
அழைத்திட்டழைத்து அழிகில்இருத்தியே
பழைத்திட்டகருவைப் பதியகேநெஞ்சில்
இழைத்திட்டபூரணி இபம்புவாள்பாரே. 259

பாரேமுனிவர் பழரிஷிசித்தர்கள்
நேரேஉரைத்தநிஜம் உள்ளசாஸ்திரம்
மாறேமறைத்த மறைபொருள்எல்லாம்
கூறேஅறியக் கூறும்முந்நூறே. 260

முந்நூறுபோலே மொழியார்கள்எவரும்
கண்ணூறுபோலக் காட்டினார்பொதிகைப்
பண்ணூறுபோலப் பரிபாஷைபேசும்
என்னூலைப்போல இசையாது நூல்களே. 261

நூலைவெளியில் விட்டவர்சுற்றம்
பாழேபோம்என்று பதிவாய்முனிவர்கள்
காளையில்ஏறும் கந்தனைஈன்ற
வாளைச்சிறுபெண் வசனித்தசாபமே. 262

சாபமேபெரிதென் றெண்ணிஇருந்தவர்
நாமமும்கிளையும் நன்றாகவாழ்த்திடும்
நேமமும்ஆக நிஷ்டையில்வாழ்ந்திடும்
சோமனைப்போலும் சுகமாய்இருப்பரே. 263

இருப்பரேபுவியில் என்றைக்கும்வாழ்ந்து
அறிப்பரேமாய்கையே அவர்கிளைசுற்றமே
தறிப்பரேபொருளைத் தான்வெளிவிட்டவர்
மரிப்பரேபெரிதும் நரகில்வாழ்வரே. 264

வாழுமேபொருளை மனதில்வைத்தோர்கள்
தாழுமோகிளைதான் தழாதுசத்தியம்
ஆழுமேபுவியில் இடங்காதஞானத்தில்
கேளுநீசொன்னேன் கிளைசுற்றம்பெருகுமே. 265

பெருகிஇருந்திடும் பெண்பிள்ளைசுற்றமும்
மருவிவளர்ந்திடும் மாறுதசெல்வமும்
பருகியஅரனும் பார்ப்பதிகிருபையும்
தருகியேபெருகித் தான்வாழும்சுற்றமே. 266

சுற்றமும்மற்றும் சுகமாகவாழ்ந்திடும்
நித்தமும்ஞானம் நிலைத்திடும்சத்தியம்
முத்தரும்காணரும் முத்தியாம்பதியில்
பத்தியாய்நின்று பரிந்துவாழ்வரே. 267

வேறு.

வாழாமல்பொருள்அதனை வெளிவிட்டோர்கள்
வையகத்தில்பிறர்சிரிக்கக் கருமநோயில்
தாளாமல்பிறவிதொறும் இவ்வண்ணம்தான்
சண்டாளப்பிணியாலே தானேமாய்வார்
கேளாமல்அரன்உமையும் சாபம்இட்டார்
கெதிஇல்லைப்பாழ்நரகே வீழ்வார்மைந்தா
கோளானகுடும்பம்எல்லாம் அழிந்துபோகும்
கும்பமுனிகூறிவைத்த சாபம்தானே. 268

சாபம்இட்டார்தபமுனி சித்தர்எல்லாம்
சண்டாளாஇந்நூலைத் தான்காட்டாதே
கோபம்இட்டசித்தர்கள் சாபம்பொல்லாது
கொடிமுடியும்வெந்துவிழும் சாம்பலாக
பாபம்இட்டஜென்மம்என்றால் பழிகட்கஞ்சான்
பயப்படாமல்பாவம்வந்து சூழ்ந்திடாது
சோபம்இட்டவஞ்சகர்க்கு நூல்கொடாதே
தூரமாய்போய்விடுவாய் சூஸ்திரமாயே. 269

சூஸ்திரத்தில்சொல்லிவைத்தப் பொருள்கள்எல்லாம்
சூதுவினயங்கள்வைத்துப் பார்க்கவேண்டும்
சாஸ்திரத்தில்முனிவர்சித்தர் சொன்னதெல்லாம்
தப்பிதங்கள்ஒன்றும்இல்லைக் கருத்தோன்றது
நேத்திஉள்ளகருட்பத்தின் கருவதாகும்
நினைவுகொண்டுபார்ப்பவனே சித்தன்ஆவன்
ஆதரமாய்ச்செய்வோர்க்கும் அறிவோர்க்கும்தான்
அப்பனேகருவேறு அறிந்துபாரே. 270

அறிந்துபார்வயித்தியத்தின் கருவேறாகும்
அந்தந்தத்தொழில்செய்யும் கருஅறிந்தால்
தெரிந்துபோம்தொழில்களிடக் குட்சம்எல்லாம்
தேவரிஷிநீ ஆவாய் சித்தன்ஆவாய்

மழுதறப்பொருளைப் பதிவாய்அடக்கிவை
மழுவறச்சத்தியம் ஆகநினைத்திடே. 258

நினைத்திட்டபேர்க்கு நிருவாணிகிருபை
அழைத்திட்டழைத்து அழிகில்இருத்தியே
பழைத்திட்டகருவைப் பதியதேநெஞ்சில்
இழைத்திட்டபூரணி இபம்புவாள்பாரே. 259

பாரேமுனிவர் பழரிஷிசித்தர்கள்
நேரேஉரைத்தநிஜம் உள்ளசாஸ்திரம்
மாறேமறைத்த மறைபொருள்எல்லாம்
கூறேஅறியக் கூறும்முந்நூறே. 260

முந்நூறுபோலே மொழியார்கள்எவரும்
கண்ணூறுபோலக் காட்டினார்பொதிகைப்
பண்ணூறுபோலப் பரிபாஷைபேசும்
என்னூலைப்போல இசையாது நூல்களே. 261

நூலைவெளியில் விட்டவர்சுற்றம்
பாழேபோம்என்று பதிவாய்முனிவர்கள்
காளையில்வறும் கந்தனைஈன்ற
வாளைச்சிறுபென் வசனித்தசாபமே. 262

சாபமேபெரிதென் றெண்ணி இருந்தவர்
நாமமும்கிளையும் நன்றாகவாழ்ந்திடும்
நேமமும்ஆக நிஷ்டையில்வாழ்ந்திடும்
சோமனைப்போலும் சுகமாய்இருப்பரே. 263

இருப்பரேபுவியில் என்றைக்கும்வாழ்ந்து
அறிப்பரேமாய்கையே அவர்கிளைசுற்றமே
தறிப்பரேபொருளைத் தான்வெளிவிட்டவர்
மரிப்பரேபெரிதும் நரகில்வாழ்வரே. 264

வாழுமேபொருளை மனதில்வைத்தோர்கள்
தாழுமோகிளைதான் தழாதுசத்தியம்
ஆழுமேபுவியில் இடங்காதஞானத்தில்
கேளுநீசொன்னேன் கிளைசுற்றம்பெருகுமே. 265

பெருகிஇருந்திடும் பெண்பிள்ளைசுற்றமும்
மருவிவளர்ந்திடும் மாறுதசெல்வமும்
பருகியஅரனும் பார்ப்பதிகிருபையும்
தருகியேபெருகித் தான்வாழும்சுற்றமே. 266

சுற்றமும்மற்றும் சுகமாகவாழ்ந்திடும்
நித்தமும்ஞானம் நிலைத்திடும்சத்தியம்
முத்தரும்கைவரும் முத்தியாம்பதியில்
பத்தியாய்நின்று பரிந்துவாழ்வாரே. 267

வேறு.

வாழாமல்பொருள் அதனை வெளிவிட்டோர்கள்
வையகத்தில்பிறர்சிரிக்கக் கருமநோயில்
தாளாமல்பிறவிதொறும் இவ்வண்ணம்தான்
சண்டாளப்பிணியாலே தானேமாய்வார்
கேளாமல்அரன்உமையும் சாபம்இட்டார்
கெதிஇல்லைப்பாழ்நரகே வீழ்வார்மைந்தா
கோளான குடும்பம்எல்லாம் அழிந்துபோகும்
கும்பமுனிகூறிவைத்த சாபம்தானே. 268

சாபம்இட்டார்தபமுனி சித்தர்எல்லாம்
சண்டாளாஇந்நூலைத் தான்காட்டாதே
கோபம்இட்டசித்தர்கள் சாபம்பொல்லாது
கொடிமுடியும்வெந்துவிழும் சாம்பலாக
பாபம்இட்டஜென்மமென்றால் பழிகட்கஞ்சான்
பயப்படாமல்பாபம்வந்து சூழ்ந்திடாது
சோபம்இட்டவஞ்சகர்க்கு நூல்கொடாதே
தூரமாய்போய்விடுவாய் சூஸ்திரமாயே. 269

சூஸ்திரத்தில்சொல்லிவைத்தப் பொருள்கள்எல்லாம்
சூதுவிணயங்கள்வைத்துப் பார்க்கவேண்டும்
சாஸ்திரத்தில்முனிவர்சித்தர் சொன்னதெல்லாம்
தப்பிதங்கள்ஒன்றும்இல்லைக் கருத்தோன்றாது
நேத்திஉள்ளகருட்பத்தின் கருஈதாகும்
நினைவுகொண்டுபார்ப்பவனே சித்தன்ஆவன்
ஆத்திரமாய்ச்செய்வோர்க்கும் அறிவோர்க்கும்தான்
அப்பனைக்கருவேறு அறிந்துபாரே. 270

அறிந்துபார்வயித்தியத்தின் கருவேறாகும்
அந்தந்தக்கோரறிச்செய்யும் கருஅறிந்தால்
தெரிந்துபோய்ச்சொரிக்கவிடக் குட்சமெல்லாம்
தேவரிஷிஆவாய் சித்தன்ஆவாய்

மழுதறப்பொருளைப் பதிவாய்அடக்கிவை
மழுவறச்சத்தியம் ஆகநினைத்திடே. 258

நினைத்திட்டபேர்க்கு நிருவாணிகிருபை
அழைத்திட்டழைத்து அழிகில்இருத்தியே
பழைத்திட்டகருவைப் பதியதேநெஞ்சில்
இழைத்திட்டபூரணி இபம்புவாள்பாரே. 259

பாரேமுனிவர் பழரிஷிசித்தர்கள்
நேரேஉரைத்தநிஜம் உள்ளசாஸ்திரம்
மாறேமறைத்த மறைபொருள்எல்லாம்
கூறேஅறியக் கூறும்மூந்நூறே. 260

மூந்நூறுபோலே மொழியார்களெவரும்
கண்ணூறுபோலக் காட்டினார்பொதிகைப்
பண்ணூறுபோலப் பரிபாஷைபேசும்
என்னூலைப்போல இசையாது நூல்களே. 261

நூலைவெளியில் விட்டவர்சுற்றம்
பாழேபோம்என்று பதிவாய்முனிவர்கள்
காளையில்ஏறும் கந்தனைஈன்ற
வாளைச்சிறுபென் வசனித்தசாபமே. 262

சாபமேபெரிதென் றெண்ணிஇருந்தவர்
நாமமும்கிளையும் நன்றாகவாழ்த்திடும்
நேமமும்ஆக நிஷ்டையில்வாழ்ந்திடும்
சோமனைப்போலும் சுகமாய்இருப்பரே. 263

இருப்பரேபுவியில் என்றைக்கும்வாழ்ந்து
அறிப்பரேமாய்கையே அவர்கிளைசுற்றமே
தறிப்பரேபொருளைத் தான்வெளிவிட்டவர்
மரிப்பரேபெரிதும் நரகில்வாழ்வரே. 264

வாழுமேபொருளை மனதில்வைத்தோர்கள்
தாழுமோகிளைதான் தழாதுசத்தியம்
ஆழுமேபுவியில் இடங்காதஞானத்தில்
கேளுநீசொன்னேன் கிளைசுற்றம்பெருகுமே. 265

பெருகிஇருந்திடும் பெண்பிள்ளைசுற்றமும்
மருவிவளர்ந்திடும் மாறுதசெல்வமும்
பருகியஅரனும் பார்ப்பதிகிருபையும்
தருகியேபெருகித் தான்வாழும்சுற்றமே. 266

சுற்றமும்மற்றும் சுகமாகவாழ்ந்திடும்
நித்தமும்ஞானம் நிலைத்திடும்சத்தியம்
முத்தரும்காணாரும் முத்தியாம்பதியில் 267
பத்தியாய்நின்று பரிந்துவாழ்வாரே.

வேறு.

வாழாமல்பொருள் அதனை வெளிவிட்டோர்கள்
வையகத்தில்பிறர்சிரிக்கக் கருமநோயில்
தாளாமல்பிறவிதொறும் இவ்வண்ணம்தான்
சண்டாளப்பிணியாலே தானேமாய்வார்
கேளாமல்அரன்உமையும் சாபம்இட்டார்
கெதிஇல்லைப்பாழ்நரகே வீழ்வார்மைந்தா
கோளானகுடும்பம்எல்லாம் அழிந்துபோகும் 268
கும்பமுனிகூறிவைத்த சாபம்தானே.

சாபம்இட்டார்தபமுனி சித்தர்எல்லாம்
சண்டாளாஇந்நூலைத் தான்காட்டாதே
கோபம்இட்டசித்தர்கள் சாபம்பொல்லாது
கொடிமுடியும்வெந்துவிழும் சாம்பலாக
பாபம்இட்டஜென்மம்என்றால் பழிகட்கஞ்சான்
பயப்படாமல்பாபம்வந்து சூழ்ந்திடாது
சோபம்இட்டவஞ்சகர்க்கு நூல்கொடாதே 269
தூரமாய்போய்விடுவாய் சூஸ்திரமாயே.

சூஸ்திரத்தில்சொல்லிவைத்தப் பொருள்கள்எல்லாம்
சூதுவினயங்கள்வைத்துப் பார்க்கவேண்டும்
சாஸ்திரத்தில்முனிவர்சித்தர் சொன்னதெல்லாம்
தப்பிதங்கள்ஒன்றும்இல்லைக் கருத்தொன்றாது
நேத்திஉள்ளகருட்பத்தின் கருவதாகும்
நினைவுகொண்டுபார்ப்பவனே சித்தன்ஆவன்
ஆதிரமாய்ச்செய்வோர்க்கும் அறிவோர்க்கும்தான் 270
அப்பனேகருவேறு அறிந்துபாரே.

அறிந்துபார்வயித்தியத்தின் கருவேறாகும்
அந்தந்தத்தொழில்செய்யும் கருஅறிந்தால்
தெரிந்துபோம்தொழில்களிடக் சூட்சம்எல்லாம்
தேவரிஷிநீஆவாய் சித்தன்ஆவாய்

சரிந்துபோம்நீசெய்யும் தொழிலைக்கண்டு
சன்னியாசிதவமுனிவன் சித்தன்என்று
நெரிந்துபோம்உலகெம்அது துதிக்கும்பாரு
நினைவாகக்கருஅறிந்து செய்துபாரே. 271

பாரப்பாகண்டறியா மூடர்க்கேது
பார்த்தறிந்துவினயம்வைத்துப் பார்க்கவேண்டும்
நேரப்பாஆசானை சொல்லவேண்டும்
நினைவுகெட்டதோஷிகட்கோ நிஜமாம்இந்நூல்
தேரப்பாமுந்நூற்றைப் போல்தான்ஒன்று
செப்பாதுசெப்பாது தெளிந்துபாரு
ஆரப்பாஅறிவார்கள் இந்தநூலில்
அடக்கம்வைத்துச்சொல்ல இல்லைஅறிந்துபாரே. 272

அறிந்துபார்இந்தமுந்நூ றடக்கம்இல்லை
அப்பனைவெளிதோன்றச் சொல்லிவைத்தேன்
தெரிந்துபார்முன்னோர்கள் சொல்லியநூலெல்லாம்
செய்பாகம்கைபாகம் நன்றாய்ஆய்ந்து
சரிந்துபார்க்கருஒன்று நாமம்கோடி
தான்சொல்லிவைத்ததனால் வெளிதோன்றாது
குறித்துப்பார்என்நூலில் மறைப்போஇல்லை
குறைகின்றபசல்களுக்கும் குறிதோணுமே. 273

தோணுமேஎன்நூலைப் பூசைபண்ணித்
தொண்டுபண்ணிவைத்திருந்தோன் அவனைசித்தன்
காணுமேசித்தர்வந்து கருவும்சொல்லிக்
காட்டுவார்நீயும்ஒரு சித்தன்ஆவாய்
பேணுமேகருஅறிந்த பெரியோர்பாடல்
பேசினதுபோல்செய்தால் பயம்ஒன்றில்லை
கோணுமேஒருபோதும் குறைவதில்லை
குறிதோன்றாக்குற்றம்அதலால் நூல்கள்பொய்யே. 274

பொய்யென்றுஉலகம் அதில்உள்ளபேர்கள்
புத்திகெட்டுமதிமயங்கிப் போனார்கோடி
சைஎன்றுபலர்கிரிக்க மடிந்தார்கோடி
தட்டழிந்துகெட்டோம்என்று தவித்தார்கோடி
மெய்யென்றுதான்நினைந்து பிரமநிலைகண்டு
வேதாந்தப்பரமகுரு கதிஎன்றெண்ணி

தோயென்றசிவன்செயலை அறிந்தபேர்க்குத் 275
தோன்றுமடா தொட்டதெல்லாம் பலிதமாமே.

## கருவிபற்பம்.

பலிதமடா இதனில்ஒரு கருவைக்கேளு
பதறாமல்சித்தர்எல்லாம் மறைத்துப்போட்டார்
தெளிதமடா கருவுக்குக் கோடிநாமம்
நீச்சுநிலை இல்லாத பொருளேகோடி
கலிதமடா மண்ஒன்று கலங்கள்கோடி
காணுகின்றநூல்ஒன்று கலைகள்கோடி
வலிதமடா தங்கம்ஒன்று பணியோகோடி 276
வசனித்தகதை அதுபோல் வகைசூதாமே.

வகையானசித்தர்எல்லாம் மறைத்ததொருபொருளை
மனதிரங்கும்மனிதர்கள்மேல் இரக்கம்கொண்டு
துகையான கருவெளியாய்த் தோன்றச்சொன்னேன்
சொன்னதினால்சிவன்முதலாய்க் கோபம்கொண்டார்
நகையானசித்தர்களும் சண்டைபோட்டு
நான்அவர்மேல்கோபித்தேன் செந்தீப்பற்றப்
பகையானசமையத்தில் சிவனும்வந்து 277
பால்கொடுத்துமுத்தம்இட்டு நந்திவாஎன்றாரே.

நந்திவாஎன்றழைத்து முன்னேவைத்து
நாதாந்தஅமிர்தம்எனக் களித்தார்ஐயா
தந்திரமாய்அவரிருக்கும் இடத்தைப்பார்த்துச்
சதாகோடிதவமுனிவர் அவரைப்போற்றி
மந்திரமாய்த்தான்நினைந்து சிவனைக்கொண்டாடி
மாமுனிவர்ரிஷிகள்சித்தர் மகிழ்ச்சிகொண்டாடி
சிந்தைதனில்நந்திபெற்ற பேறேபேறு 278
சிக்காதுதவமகிமை தான்என்றாரே.

தவமகிமைநந்தியைப்போல் இல்லைஎன்றார்
தாங்காதபதஞ்சலியைத் தாங்கப்போமே
நவமகிமைசிவனுக்கு நந்திபார்வை
நந்திஎன்றரிஷபம்அது சிவத்தின்பார்வை
குலமகிமைஉள்ளவர்க்கு இடதுகண்ணைக்
கொள்கிறார்அதினாலே சித்தர்பகைஆச்சு
பலமகிமைநந்திஎன்று சிவன்வாக்கும்பெற்றுப் 279
பாயாமல்பூமிதனில் படுத்தேன்பாரே.

படித்தனடாசிவனுக்கு முன்னேபூசை
பார்மகனேஎனக்குத்தான் பின்பூசைஆகும்
கொடுத்துவிடச்சிவன்சொன்ன வாக்குப்பெற்றுக்
கோடியுகம்பூமிதனில் வாழ்ந்தேன்பாரு
அடுத்ததொருமணிதருக்குப் பிணிநோய்தீர
அப்பனேஅறைகின்றேன் உபாயம்கேளு
தடுத்தகெந்தகத்தின் பற்பம்சொல்வேன்
சகலநோய்க்குடிபோகும் தன்மைபாரே. 280

## செந்தகற்பம்.

தன்மைஎன்றகெந்தகத்தின் கட்டிவாங்கிச்
சற்குருவைதான்நினைந்து முப்பூப்பூசிச்
செம்மையுடன் ஆற்றுவல்லிக் கிழங்கரைத்துத்
திடமாகக்கவசம்இட்டுச் சீலைசெய்து
வண்மைஎன்றஜாண்புடமே வைத்தாயானால்
மக்களேவெண்மை அது என்னசொல்வேன்
பெண்மைஎன்றபிணிஎல்லாம் ஓடிப்போகும்
பேதம்இல்லைச்சத்தியமாய்ச் சொன்னேன்பாரே. 281

சொன்னதொருசரக்கெல்லாம் இப்படியேசெய்வாய்
சொர்னம்என்றபொருள்கூடும் துறையோகோடி
அண்ணல்என்றசிவன்எனக்குச் சொன்னவித்தை
அப்பனேஒருவருக்கும் விள்ளவேண்டாம்
துண்ணல்என்றத்தொழில்செய்து மகனேநீயும்
தூய்தபசுநிறைவேடச் சொன்னேன்யானும்
கண்ணல்என்றலிங்கமுடன் கெவுரிவீரம்
கட்டானபூரமுடன் தாரம்ஆமே. 282

தாரம்அடாமனோசிலையும் சிங்கிநாகம்
தன்மைஎன்றகாரியம் பாஷாணம்எல்லாம்
ஆரம்அடாசரக்கெல்லாம் கட்டிநீறும்
அப்பனேசெந்தூரம் மெழுகும் ஆகும்
வீரம்அடாகுறையாது சூரியனும்முப்பூ
விரவியேகொண்டுவிடக் காயசித்தி
பாரம்அடாசெந்தூரம் மெழுகின்மார்க்கம்
பாடிவைத்தேன் நால்தனிலேபணிந்துபாரே. 283

பணிந்துபார் இந்தமுறை நூறுதன்னைப்
படராமல் துறைதனிலே பதனம்பண்ணி
பணிந்துபார் சித்தரெல்லாம் மறைத்துப்போட்டார்
அப்போதல்லோ அவர்களுடன் வாதுபேசித்
துணிந்துபார் தவம்வேண்டும் என்றபேர்க்கு
ஜடம்வேண்டும் இல்லாவிட்டால் தவம்கிட்டாது
கணிந்துபார் முனிவர்சித்தர் பாடிபநூற்கெல்லாம்
கருதும்இந்நூல் திறவுகோல் கண்டுபாரே. 284

கண்டுபார் இந்நூலை வெளிவிட்டோர்க்குக்
கண்கெட்டுத்தலைதெறித்துக் கனலோமிஞ்சி
மண்டுபார் அவன்குலமும் நசித்துப்போகும்
மைந்தனே எழுபிறப்பும் நயனஒளியில்லை
பண்டுபார் முனிவர்சித்தர் சொன்னசாபம்
பழுதுவராதியான்சொன்ன சாபம்பொய்யா
உண்டுபார் எழுபிறப்பும் வந்துசூழும்
உலகம்அதில்நாட்டாதே அடக்கம்பண்ணே. 285

அடக்கம்அடா மனதடக்கம் வெகுவாய்வேண்டும்
அப்பனேமன்னுயிர் தன்னுயிர்போல்செய்து
ஒடுக்கம்அதுதனில்இருந்து கருவைத்தேடி
ஒருவருக்கும்தெரியாமல் தொழிலைச்செய்து
தடக்கமுடன் நீஇருந்து கற்பம்உண்ணு
தான்உண்ணத் தேகம்அது தங்கம்போலாம்
விடக்கெடுக்கநாயில்இருந் தாலென்ன
மேதினியில்உள்ளவரும் சித்தர்ஆமே. 286

சித்தனாய் இருப்பவர்கள் கோடிக்கொன்று
தெளிவுகண்டு அறிவுகொண்டு தேறவேண்டும்
முத்தனாய் என்நூலில் கருவைக்கண்டு
முடிக்கும்வகைதான் அறிந்து முறைதப்பாமல்
பத்தனாய்ச் சிவன்மேலே பாரம்போட்டுப்
பரமகுருபாதம் அதை நெஞ்சில்வைத்துக்
கர்த்தனாய் நீஇருந்து காட்சிபெற்றுக்
கண்டுகண்டு தேறுவது கடினம்தானே. 287

கடினம்அடா வெகுகடினம் மனதடக்கம்பண்ணு
கண்மணியே கருவைஎல்லாம் வெளியாய்ச்சொன்னேன்

படினம்அடாசித்தர்சொன்ன சாஸ்திரங்கள்எல்லாம்
பலவிதமாய்ச்சொல்லிவைத்தார் கருத்தோன்றாமல்
நடினம்அடாநான்சொன்ன மூந்நூறுதன்னை
நாதாக்கள்கேட்டுமெச்சச் சிவனும்மெச்ச
வடினம்அடாமூந்நூறும் வெளிவிட்டோர்க்கு
மகத்தானரிஷிகள்சொல்லும் சாபந்தானே. 288

சாபம்அடாஎழுபிறப்பும் தீர்க்கொண்ணாது
சண்டாளசெனனமதாய்ப் பிறக்கும்பாரு
பாபம்அடாஅவன்குலங்கள் ஊமையாகிப்
பழிப்பவர்க்குக்கண்குருடு சப்பாணிஆகிப்
போகம்அடாக்ஷயரோகம் குன்மம்காசம்
பொல்லாதநோய்களிலே அழுந்துவான்பார்
ஏகம்அடாஎன்குருவும் சிவனும்சொன்னார்
ஏழைமதிப்போகாதே நூல்கொடாதே. 289

கொடுக்காமல்வெகுபதனம் பண்ணிக்கொண்டு
குருபதனைத்தாள்நினைந்து நூலைவைத்துத்
தடுக்காமல்பூசைபண்ணி அந்திசந்தித்
தான்தொழுவாய்சிவன்பதத்தை நெஞ்சுள்வைத்துக்
கொடுக்காமல்குகைதனிலே தனித்திருந்துக்
குருவானமூந்நூற்றை அவிழ்த்துப்பார்த்து
விடுக்காமல்ஞானநிலை கண்டுதேறி
வேதாந்தக்கருவைஎல்லாம் மனதில்வையே. 290

வையடாசிவன்மேலே ஆணைஆணை
மகத்தானசித்தர்கள்மேல் ஆணைஆணை
பொய்படாபோகாது கணபதிமேல்ஆணை
புகழ்ப்பெரியவள்ளிபங்கன் தன்மேல்ஆணை
மையடாநல்லோர்கள் பெரியோர்மேல்ஆணை
நான்சொன்னசாபம்எல்லாம் பலிக்கும்பாரு
தொய்படாஎந்தனிட மூந்நூறுதன்னைத்
தொல்லுலகில்பொல்லவர்க்குச் சொல்லொண்ணாதே. 291

## கருக்கிடை.

சொல்லியதோர்கருவுக்கு நாமம்கோடிச்
சொல்லிவைத்தார்சித்தர்எல்லாம் கூடிக்கூடி

வல்லியதோர் இக்கருவை மறந்தபேர்க்கு
வகைஆகமாட்டாது தொழிலும்பொய்யாம்
மெல்லியதோர் இதுதொழிற்குப் புரைமோர் ஆகும்
வேதம்நின்று விளங்குவதிக் கருவினாலே
தெள்ளியதோர் நூல்களுக்குத் திறவுகோல்ஆம்
சித்தர்சொன்னமறைப்பெல்லாம் தெளிந்துபோமே. 292

தெளிந்துபோம்சிற்றண்டம் விந்துஆகும்
தெளிவானபிரிதீவு நாதம்ஆகும்
ஒழிந்துபோம்இரண்டினால் உலகவாழ்க்கை
வுத்தமனே இரண்டும்ஒன்றாய்ச் சேர்ந்தபோது
வழிந்துபோம்உருஆச்சு மண்பொன்ஆச்சு
மக்களேகற்பம்உண்ண வலுவும்ஆச்சு
அழிந்துபோம்இக்கருவை விட்டபேர்க்கு
ஆகாதுஉடலம்நிலை யாதுபாரே. 293

நிலையாதுபிண்டம்அதை மறந்தபேர்க்கு
நிகழ்ந்ததொருகங்கைஎன்ற கன்னிநீர்ஆம்
துலையாதுஅன்னமயம் பூநீர்ஆகும்
துலங்கும்அடாபேரண்டம் வெள்ளைக்கல்லு
மலையாதேஅமரிஎன்ற சிவனும்போகும்
மாத்திரியக்கரு அல்லோ கொடிநஞ்சும்மாவும்
கலையாதேஇக்கருவைச் சாஸ்திரங்கள்தோறும்
கட்டினார்கருஎன்று கோடிநாமம்தானே. 294

நாமம்தான்வெகுகோடி நாமம்ஆகும்
நாதாக்கள்பலவிதமாய்ச் சொன்னமார்க்கம்
சேமம்தான்உலகத்தில் சொன்னவார்த்தை
சிறுமீன்தான்பெருமீனுக் கிரையாம்என்று
வாமம்தான்மனுச்சொல்லக் கேட்டிலீரோ
மக்களேபிரபஞ்ச மாயைபொய்யாம்
சோமன்தான்ஞானவெள்ளம் நிஜம்என்றெண்ணித்
துணிந்தவர்க்குஞானநிலை கைவசமாம்பாரே. 295

கைவசமாம்உலகில்உள்ள பூடோவேறாய்க்
கட்டும்அடா இந்தஉடல் கட்டாதப்பா
மெய்வசமாம்வாதம்உண்டு வைத்தியம்உண்டு
வேணஅஷ்டகர்மம்முதல் எல்லாம்உண்டு

கைவசமாய்உடல்கட்ட மாட்டாதப்பா
கட்டும்இக்கருவெளியாய்த் தோன்றாதப்பா
பொய்வசமாய்ச்சொல்லிவைத்தார் சித்தர்எல்லாம்
பூவினிடஉப்பெடுத்து ஆடுவாரே. 296

பூஎன்றால்மற்றதெல்லாம் பூஆமோசொல்
புத்திகெட்டமாடே நீ பூநீர்கேளு
வேஎன்றால்சிவந்தகன்னி மாதம்சென்று
வெளியானநீர் அல்லோ பூநீர்ஆகும்
காமென்றால்காரம்அடா சாரம்ஆகும்
கட்டானவீரம் அல்லோ பூரம்ஆகும்
நேமென்றால்இதைவிட்டால் காரம்இல்லை
நின்றதொருமாதுநீர் தீபம்பாரே. 297

## மாற்றமை.

பாரடாமறைப்பினிட மார்க்கம்தன்னைப்
பண்பாகச்சொல்லுகிறேன் சுளுவாமெத்த
நேரடாகருங்கன்னிச் சாறுவாங்கி
நிழலிலேவைத்துலர்த்திக் காயவைத்துப்
பேரடாபேய்ப்பீர்க்கும் ஆமணக்கின்விரையும்
பிலமாகச்சரிஇடையாய் எடுத்துக்கொண்டு
தூரடாபிடித்துநன்றாய்த் தயிலம்வாங்கித்
தூரநீர்தனைவிட்டு நன்றாய்ஆட்டே. 298

ஆட்டையிலேபித்தும்அது கொஞ்சம்போட்டு
அப்பனேசந்திரன்தன் மெழுகும்போட்டுக்
காட்டையிலேகரும்பல்லி அண்டோட்டில்கருக்கிக்
கண்மணியேமண்தவளை நெய்யும்சேர்த்து
மூட்டையிலேஅரைத்துநன்றாய் வழித்துவைத்து
முனையானவயிரவனைத் தியானம்பண்ணி
நாட்டையிலேபுருவம்அதில் திலதம்போடு
நற்றுவார்எவ்வெவர்க்கும் நாதன்நீயே 299

நாதன்என்றசித்தர்கள்தான் ஆடும்மையை
நான்வெளியாய்ச்சொல்லிவைத்தேன் நன்றாய்த்தானும்
ஆதன்என்றஆண்மஞ்சள் பெண்மஞ்சள்பார்த்து
அப்பனேகருத்தயிலம் இறக்கிக்கொண்டு

வேதன்என்றதிகைப்பூச்சி அண்டோட்டில்கருக்கி
விள்ளுவாய்த்தயிலம்விட்டு நன்றாய்ஆட்டிச்
சூதன்என்றசீலையிலே தடவிக்கொண்டு
சுருட்டடா திரிஅதனை விளக்கில்போடே. 300

போட்டஉடன்அண்டோடு கவிழ்ந்துமூடி
பொருந்திநின்றகாராவின் நெய்யைவிட்டு
வாட்டமுடன்கபாலத்திற் பற்றும்மையை
மைந்தனேசுரண்டி அதில் தயிலம்விட்டு
நாட்டமுடன்சந்திரன்என்ற மெழுகும்கூட
நலமானபித்தும்இட்டுப் புனுகுகூட்டித்
தேட்டமுடன்அரைத்துநன்றாய்ச் சிமிழில்வைத்துத்
தேவைஎன்றபேர்நினைத்துத் திலதம்போடே. 301

போட்டஉடன்உலகம்எல்லாம் வணங்கும்பாரு
பொல்லாததுஷ்டரொடு மிருகம்எல்லாம்
நாட்டமுடன்கைவசமே ஆகும்பாரு
நவிலாதேஇக்கருத்தை வெளிவிடாதே
கூட்டமிட்டுத்திருடாதே குறிசொல்லாதே
குணம்கெட்டமாய்கைதனில் அகப்படாதே
வாட்டமுடன் இந்தமைப்போல் வசிகரங்கள்
வாயாது உலகம் அதில் வரிசைபாரே. 302

## அஞ்சனமை வேறுமுறை.

வரிசையுடன் அஞ்சனத்தைச் சொல்லக்கேளு
மைந்தனே பூமிநீர் கொண்டுவந்து
நெரிசையுடன்அரைத்துநன்றாய் வில்லைதட்டி
நினைவாகக்குழித்தயிலம் இறக்கிக்கொண்டு
பரிசையுடன்சந்திரன்என்ற மெழுகும்போடு
பண்பானபித்துடனே கண்ணும்போடு
தரிசையுடன்தயிலம்இட்டு ஆட்டிநன்றாய்த்
தந்தம்என்றசிமிழ்அதனில் மூணுமையே. 303

மூணுமையும்வைத்துப் பூசைபண்ணி
முன்சொன்னமைஅதற்கு வயிரவன்தன்பூசை
காணும்அடாபின்சொன்ன வசியமைக்குக்
கணபதியின்பூசைசெய்து கருத்தாய்நில்லு

தோணும்அடா அஞ்சனா தேவிபூசைச்
சொல்லியே ஆயிரம்தான் உருவும்செய்து
வேணும்என்றநேரம்அதில் தொழிலைச்செய்வாய்
வேதமுறைதவறாமல் பலிக்கும்பாரே. 304

பலிக்கும்அடாசாஸ்திரத்தை வெளிவிடாதே
பாடியதோர்கரு அதனில் பொருள்சொல்லாதே
கலிக்கும்அடாதொழில்கள் சிவன்கருணையாலே
கடினம்என்றசித்தர்களாம் முனிவராலே
சொலிக்கும்அடாஉன்நாவில் ஈஸ்பரியாள்கிருபை
தோன்றும்அடாசற்குருவும் ஒன்றாய்த்தோன்றும்
கெலிக்கும்அடாநந்திதான் சொல்முந்நூறு
கெதிபெற்றசூட்சகாரணமாய்முற்றே. 305

முத்திபெறஞானறிவு தங்கிநின்று
மோட்சநிலைதான்அறிந்து சித்தும்பெற்றுப்
பற்றிநின்றசுடர்ஒளியைப் பதிவாய்க்கண்டு
பழக்கத்தால்வாசிநின்ற தலமும்கண்டு
சித்திபெற்றக்கருவினிட சூட்சம்கண்டு
தெளிந்தமதிமாயைவிட்டுச் சிவமேஎன்று
சத்திநின்றஇடம்காணப் பேறும்பெற்றுச்
சகலஉயிர்தானும் முந்நூறுமுற்றே. 306

நந்தீசுரர் கருக்கிடை அருளிச்செய்த௩௱.

முற்றிற்று.



# பொருள் அட்டவணை.



பொருள் அட்டவணை-முற்றிற்று.

தோணும்அடா அஞ்சனு தேவிபூசைச்
சொல்லியேஆயிரம்தான் உருவும்செய்து
வேணும்என்றநேரம்அதில் தொழிலைச்செய்வாய்
வேதமுறைதவறுமல் பலிக்கும்பாரே. 304

பலிக்கும்அடாசாஸ்திரத்தை வெளிவிடாதே
பாடியதோர்கரு அதனில் பொருள்சொல்லாதே
கலிக்கும்அடாதொழில்கள் சிவன்கருணையாலே
கடினம்என்றசித்தர்களாம் முனிவராலே
சொலிக்கும்அடாஉன்நாவில் ஈஸ்பரியாள்கிருபை
தோன்றும்அடாசற்குருவும் ஒன்றுய்த்தோன்றும்
கெலிக்கும்அடாநந்திதான் சொல்முந்நூறு
கெதிபெற்றசூட்சகா ரணமாய்முற்றே. 305

முத்திபெறஞானறிவு தங்கிநின்று
மோட்சநிலைதான்அறிந்து சித்தும்பெற்றுப்
பற்றிநின்றசுடர்ஒளியைப் பதிவாய்க்கண்டு
பழக்கத்தால்வாசிநின்ற தலமும்கண்டு
சித்திபெற்றக்கருவினிட சூட்சம்கண்டு
தெளிந்தமதிமாயைவிட்டுச் சிவமேஎன்று
சத்திநின்றஇடம்காணப் பேறும்பெற்றுச்
சகலஉயிர்தானும் முந்நூறுமுற்றே. 306

நந்தீசுரர் கருக்கிடை அருளிச்செய்த௩௱.

முற்றிற்று.



# பொருள் அட்டவணை.



பொருள் அட்டவணை-முற்றிற்று.